ஏப்ரல் 2005  Rs. 12 /-

# அம்புலிமாமா

ஜீ-மேன்
சாகஸங்களை இந்த இதழில்
படித்து மகிழுங்கள்

G-man



# அம்புலிமாமா மதிமுகம் : 109 ஏப்ரல் : 2005 புன்னகை : 04



## பொருளடக்கம்



## சிறப்புப் படைப்பாக


















SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**

*Remittances in favour of Chandmama India Ltd.*
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
**No. 82, Defence Officers Colony**
**Ekkatuthangal,**
**Chennai - 600 097**
**E-mail :**
subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத் தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900 /- இந்தியாவிற்குள் ரூ.144/- **புக்போஸ்டில் உங்கள்** சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியாடரிலோ **சந்தமாமா இந்தியா லிமிடெட்** என்ற பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# கூடி வாழ்ந்தால் கோடி நன்மை

இயற்கையாக வாழும் உயிரினங்களை கவனித்தோமானால், ஓர் உண்மை புலப்படும். காட்டில் மிருகங்கள் அணி அணியாக சேர்ந்து வாழ்கின்றன. பறவைகள் கூட்டம் கூட்டமாக சேர்ந்து வாழ்கின்றன. எதிர்பாராத ஆபத்துகளிலின்றும், எதிரிகளிடமிருந்தும் தங்களைக் காத்துக் கொள்ளவே, அவை அவ்வாறு கூடி வாழ்கின்றன. மனிதர்களும் தொடக்கத்தில் அப்படித்தான் வாழ்ந்தனர். ஆனால் வாழ்க்கை வசதிகள் பெருகிய பிறகு, தங்கள் தங்கள் குடும்பத்கோடு தனியாக வாழத் தலைப்பட்டனர். இப்போதும் கூட மனித இனத்திற்கு பேராபத்து நிகழும் தருணத்தில் மனிதர்கள் கூட்டமாக ஒன்று சேர்ந்து வருவதை எதிர் கொள்கின்றனர்.

அப்படிப்பட்ட ஒரு நிகழ்ச்சியை மூன்று மாதங்களுக்கு முன் இந்தியா சுனாமியால் பாதிக்கப்பட்டபோது கண்கூடாகக் கண்டோம். சுனாமியால் உயிர் துறந்தவர்களுக்காக கண்ணீர் அஞ்சலி செலுத்தியதோடு மட்டும் நின்று விடாமல் பாதிக்கப்பட்டவர்களுக்கு அனைத்து இந்திய மக்களும் மொழி இன பேதமின்றி ஒற்றுமையாக உதவிக்கரம் நீட்டியதைப் பார்த்தோம்.

பிறர் உதவியை நாடாமல் தங்களுடைய முயற்சிகளினாலேயே சுனாமியால் பாதிக்கப்பட்டவர்களுக்கு ஒட்டு மொத்த இந்தியர்களும் திரண்டெழுந்து செய்த பேருதவி கூடி வாழ்ந்தால் கோடி நன்மை என்ற அரிய உண்மையை எடுத்துக் காட்டுவதாக உள்ளது. இப்படிப்பட்ட ஒருங்கிணைந்த உதவி இதுவே முதல் முறை என்று வைத்துக் கொண்டாலும், முதல் முறையிலேயே அது மிகச் சிறப்பாக அமைந்ததைக் கண்டு பெருமை கொள்ளும் 'அம்புலிமாமா' எதிர் காலத்திலும் நமது இந்திய மக்கள் இதே போன்ற ஒற்றுமை உணர்வோடு செயற்படுவர் என்று உறுதியாக நம்புகிறது.

ஆசிரியர்:**விஸ்வம்**

Visit us at : http://www.chandamama.org



## வாசகர்களுக்கானக்
# கதைப் போட்டி (செப்டம்பர்)
### தேர்ந்தெடுக்கப் பட்ட
### சிறந்த கதை



"நான் அன்றன்றைய வியாபாரப் பணத்தை பீரோவில் வைத்திருப்பேன். தலையணை அடியில் சாவி வைத்திருப்பேன். முதல் நாள் திருட்டு நடந்ததும் மறுநாள் தலையணை அடியிலேயே மறுபுறமும், மூன்றாம் நாள் தலையணை நடுவிலும் சாவியை வைத்திருந்தேன். அப்படியும் திருடு போய்விட்டது. எப்படி என்று புரிய வில்லை. மனைவி வெளியூர் சென்று உள்ளாள்" என்றான் ராம்குமார்.

"சரி, நீ வீட்டில் யாரிடமும் இரவு வெகு நேரம் வரை பேசி இருக்கிறாயா?" என்றான் கிருஷ்ண குமார். "ஆம்! திருடு போன அன்று பக்கத்து வீட்டு மாணிக்கம் இரவு பத்து மணி வரை என்னுடன் பேசிக் கொண்டு இருந்தார். நான் பீரோவில் பணம் வைத்ததும் தலையணைக்கடியில் சாவி வைத்ததும் அவருக்குத் தெரியும். ஆனால் மற்ற இரு நாட்களில் அவர் என் வீட்டிற்கு வரவில்லை" என்றான் ராம்குமார். "சரி! மாணிக்கம் வீட்டிலிருந்து உன் வீட்டிற்கு வர வழியுண்டா?" என்று கிருஷ்ணகுமார் கேட்டான். அதற்கு ராம்குமார், "ஆம்! மாடிச்சுவரில் தாண்டி வந்து விடலாம்" என்றான். "இன்று பணத்தை பீரோவில் வைத்துப் பூட்டிய பின் இடுப்பில் சாவியை கொத்துத் தெரியும்படி வைத்துக்கொள். மேலே சட்டையோ போர்வையோ போடாதே. எப்போதும் போல் இரவு விளக்கு எரியட்டும். தூங்கும் பொழுது இடுப்புச்சாவியை அவன் எடுக்கும் பொழுது உணர்ச்சியால் உன் உறக்கம் கலையும். அவன் எடுத்துப் பீரோவைத் திறக்கச் செல்லும் போது அவனுக்குத் தெரியாமல் பின்னால் சென்று பீரோ உள்ள அறையில் அவன் உள்ளே நுழைந்ததும் அறையை மூடி வெளிப்புறத்தாழ்ப்பாளைப் போட்டு விடு அதன் பின் நாம் அவனைப் பிடித்துக் கொள்ளலாம்" என்று கிருஷ்ணகுமார் கூறினான். அவ்வாறே ராம்குமார் செய்ய மாணிக்கம் மாட்டிக் கொண்டான்.

**தி. கலைச்செல்வி,** (6ஆம் வகுப்பு) த/பெ. கு. திரவியம்,
எண் 13, தாங்கல் தெரு, விருகம்பாக்கம்,
சென்னை - 600 092.



# இதுவன்றோ வீரம்!

மகேந்திரபுரியை ஆண்டுவந்த விஜயேந்திர மன்னருக்கு, வடக்கு திசையிலிருந்த கொடூரமான காட்டு வாசி இனத்தினர் அடிக்கடி போர் தொடுத்து ஓயாத தொல்லை கொடுத்தனர். அவர்களை அடக்கு வதற்காக தனது படைகளைப் பலப்படுத்த விரும்பிய மன்னர் வீரமும், துணிச்சலும் மிகுந்த வாலிபர்களைக் கொண்டு ஒரு தனிப்படை நிர்மாணிக்க விரும்பி அந்தப் பொறுப்பைத் தன் முதல் மந்திரியிடம் ஒப்படைத்தார்.

ஒருநாள் இருபது வயது நிரம்பிய ஒரு வாலிபன் அரண்மனைக் காவலர்களை அணுகி தான் மன்ன ருடைய தனிப்படையில் சேர விரும்புவதாகவும் மன்னரைக் காணவேண்டுமென்றும் தெரிவித் தான். அவனைப் பார்த்த உடனேயே காவலர்கள் சிரிக்க ஆரம்பித்தனர். அதைக் கண்டு கோபமுற்ற அந்த வாலிபன், ''என்னுடைய இடது பக்க மீசை சிறியதாகவும் வலப்பக்கம் பெரியதாகவும் இருப்பதைக் கண்டு சிரிக்கிறீர்கள் என்று தோன்றுகிறது. ஆனால் என் இடது பக்க குட்டை மீசையின் பின்னணியில் ஒரு வீர சாகசக் கதை உள்ளது. அதை அறிந்தால், நீங்கள் இப்படி சிரிக்க மாட்டீர்கள்'' என்றான்.

''அப்படி என்னப்பா கதை அது? நாங்களுந்தான் கேட்கிறோம்!'' என்றனர் காவலர்கள்.

''உங்களைப் போன்ற சாதாரண மனிதர்களிடம் அதைச் சொல்ல முடியாது. அதைக் கேட்கும் தகுதி மன்னருக்குத்தான் உள்ளது. வழி விடுகிறீர்களா இல்லை?'' என்று தன் வாளை உருவினான்.

''அடேயப்பா! நீ பெரிய சூரன் என்றுதான் தோன்றுகிறது! ஆனால் நீ முதலில் பார்க்க வேண்டியது முதல் மந்திரியை! அவரிடம் போய் உன் கதையைச் சொல்'' என்று அவனை மந்திரியிடம் அனுப்பி வைத்தனர்.

-செந்தில்குமார்-

முதல் மந்திரியிடம் சென்ற அந்த வாலிபன் எடுத்த எடுப்பிலே கொஞ்சமும் தயக்கமின்றி ''காட்டு வாசியினரை அடக்குவதற்காக மன்னர் தனிப்படை திரட்டுகிறார் என்று அறிந்தேன். வீரமுள்ள வாலிபர்களையே அவர் விரும்புவதாகவும் அறிந்தேன். அதனால்தான் அதில் சேர நான் இங்கு வந்துள்ளேன்'' என்றான்.

தனக்கு வந்த சிரிப்பை அடக்கிக் கொண்ட மந்திரி ''நீ சூரப்புலி என்று உன் மீசையைப் பார்த்தாலே தெரிகிறது. ஆனால் உன் மீசையைப் பார்த்தால், எதிரிகள் போர் செய்வதை நிறுத்திவிட்டு சிரிக்க ஆரம்பித்து விடுவார்களே என்றுதான் கவலையாக இருக்கிறது'' என்றார்.

''என் இடது பக்க மீசை ஏன் பாதிதான் உள்ளது என்ற காரணத்தை அறிந்தால் நீங்கள் இவ்வாறு பேசாமல் என்னைப் படை வீரனாக ஆக்கி விடுவீர்கள். கேளுங்கள் என் கதையை'' என்று வாலிபன் விளக்கத் தொடங்கினான்.

''நான் சாமர்த்தியமாகக் காட்டு வாசிகளின் தலைவனின் மாளிகையின் உள்ளே நுழைந்து அவனுக்கு நேரே போய் நின்றேன். தலைவனைப் பார்த்து தைரியமாக 'அட அற்பப் பதரே! என்ன தைரியமிருந்தால் எங்களுக்கு இப்படி தொல்லை கொடுப்பாய்? நீ விரும்பினால், என்னுடன் சண்டையிடு' என்று சவால் விட்டேன். உடனே அவன் கோபங்கொண்டு தன் வாளை என் மீது வீசி எறிந்தான். அது என் மீது சரியாகப் படாமல் என் இடது புற மீசையை மட்டும் வெட்டி விட்டது. அங்கு பிடித்த ஓட்டம், நேரே இங்கு வந்து தான் நிற்கிறேன்'' என்றான் அந்த வாலிபன்.

அந்த கதையைக் கேட்டு விழுந்து விழுந்து சிரித்த முதல் மந்திரி, ''உனக்குக் கட்டாயம் வேலை கிடைக்கும். ஆனால் படை வீரனாக அல்ல ராஜாவின் விதூஷகனாக!''

''அப்படியென்றால்? '' என்று வாலிபன் திகைத்தான்.

''உன்னை விகடகவியாக, ஆஸ்தான கோமாளியாக நியமிக்க சிபாரிசு செய்கிறேன்'' என்றார் மந்திரி.





# மனதில் துணிவு வேண்டும்

இரவு உணவு உண்டு முடிந்தபின், சாவித்திரி பாட்டி குழந்தைகளுக்குக் கதை சொல்லத் தயாரானாள். அந்த சமயம், ஒரு சிறுவன் சூர்யா என்ற சிறுவனைக் காட்டி, ''பாட்டி இன்று சூர்யா பள்ளியிலிருந்து பாதியிலேயே ஓடி வந்து விட்டான். ஏன் தெரியுமா? யாரோ ஒரு மாணவன் தன் பேனா காணாமற் போய்விட்டது என்று வகுப்பாசிரியரிடம் புகார் செய் தானாம். ஆசி ரியர் ஒ வ்வொரு மாணவனுடைய புத்தகப்பையையும் சோதனையிடத் தொடங்கினார். சூர்யா தன் பையைத் தானே சோதித்தபோது க ாணாமற்போன பேனா அவன் பையில் இருந்தது. உடனே பயந்துபோய், யாரிடமும் சொல்லாமல் வகுப்பறையிலிருந்து வெளியேறி வீ ட்டுக்கு ஓ டி வ ந்து விட்டான்'' என்றான்.

பாட்டி உடனே சூர்யாவை நோக்கி, ''தவறு குழந்தை! மனிதனாகப் பிறந்தவர்களுக்கு மனதில் துணிவு வேண்டும். அதைப் பற்றி ஒரு கதை சொல்கிறேன் கேளுங்கள்'' என்று கதை சொல்லத் தொடங்கினாள்.

''ஒரு குருகுலத்தில் ஸ்ரீதரன், கண்ணன் என்ற இரு சிறுவர்கள் சேர்ந்து பயின்று வந்தனர். படிப்பு முடிந்ததும் இருவரும் குருவை விட்டுப் பிரியும் போது குரு அவர்களை நோக்கி, ''பிள்ளைகளே! சீரும் சிறப்புமாக இருந்த ஒரு ராஜாவை விட்டு அஷ்டலட்சுமிகள் யாவரும் அவன் கண்ணெதிரிலேயே ஒருவர் பி ன் ஒ ருவராக வி லகினர். கடைசியாக தைரிய லட்சுமியும் அவனை வி ட்டு வி லகும் ே பாது ராஜா, ''தேவி, எல்லா லட்சுமியும் என்னை கைவிட்டுச் சென்றபோது பொறுமையாக இருந்தேன். ஆனால் நீயும் என்னை விட்டுப் போனால் என்னுடைய அழிவுகாலம் நெருங்கி



விடும். நீ எனக்குத் துணையாக இருந்தால், மற்ற தேவிகளை என் முயற்சியால் மீண்டும் அடைந்து விடுவேன்!'' என்று வேண்டினான்.

மனம் இரங்கிய தைரிய லட்சுமி அவனை விட்டுப் பிரிவதில்லை என்று உறுதியளித்தாள். ராஜா தனது விடா முயற்சியால் இழந்த செல்வங்களை மீண்டும் பெற்றான். இந்தக் கதையில்இருந்து நீங்கள் அறிய வேண்டியது இ துவே! ம னதில் துணிவுள்ளவனே தனக்கு நேரிடும் அபாயங்களிலிருந்து தன்னைக் காத்துக் கொண்டு மேன்மை அடைவான். ஆதலால் எப்போதும் தைரியமாக இருங்கள்'' என்று அறிவுரை கூறி அனுப்பினார்.

பிறகு, இரு நண்பர்களும் வேலை தேடி தலை நகரத்தை நோக்கிப் புறப்பட்டனர். தலை நகர எல்லையை அடையும்போது இருட்டி விட்டதால், இருவரும் ஒரு சத்திரத்தில் அன்றிரவு தங்கினர். இருவரும் அயர்ந்து உறங்குகையில் திடீரென நள்ளிரவில் சத்திரத்தில் பெரிய அமளி ஏற்பட்டது ஆட்கள் நடமாடும் சத்தமும் கூக்குரல்களும் கேட்டன. நண்பர்கள் இருவரும் விழித்தெழுந்து பக்கத்தில் உள்ளவர்களை விவரம் கேட்டபோது அரண்மனை அந்தப்புரத்தில் திருட்டு நடந்து விட்டது என்றும், திருடர்களைத் துரத்திக் கொண்டு வந்த அரண்மனைக் காவலர்கள் திருடர்கள் சத்திரத்தில் ஒளிந்துள்ளதை அறிந்து, திருடர்களை ஒவ்வொர் அறையாகத் தேடிக் கொண்டிருக்கின்றனர் என்றும் தெரிய வந்தது. திடீரென காவலர்கள் அவர்கள் அறையுள் நுழைந்து அவர்களுடைய பயணப் பைகளை சோதனையிடத் தொடங்கினர். ஸ்ரீதரனின் பயணப்பையுள் ராணியின் நவரத்தின மாலை இருந்ததைக் கண்டதும் இரு நண்பர்களும் திடுக்கிட்டனர். ''ஐயா, நாங்கள் நேர்மையானவர்கள். யாரோ திருடர்கள் என் பையினுள் வேண்டுமென்ற திருட்டுப் பொருளை போட்டிருக் கின்றனர்'' என்று ஸ்ரீதரன் புலம்பியும் காவலர்கள் அவனை விடவில்லை. இரு நண்பர்களையுமே பிடித்து அடித்து, உதைத்து விசாரணை செய்ய ஆரம்பித்தனர். கண்ணன் மட்டும் எப்படியோ காவலர்களிடமிருந்து தப்பித்துக் கொண்டு ஓடி விட்டான். ஆனால் ஸ்ரீதரன் ஓட முயற்சி

செய்யாமல், தான் நிரபராதி என்பதையே திரும்ப திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தான். ஸ்ரீதரனை மட்டும் பலவந்தமாகப் பிடித்துச் சென்று சிறையில் அடைத்த காவலர்கள், ம றுநாள் க ாலை அவனை மன்னர் முன்னிலையில் நிறுத்தினர். மன்னரிடம் தன்னைப் பற்றிய விவரங்களை அறிவித்த ஸ்ரீதரன் தானும் தன் நண்பனும் குற்றமற்றவர்கள் என்பதை வலியுறுத்தினான்.



உடனே மன்னர், ''நீங்கள் இருவரும் நிரபராதி என்பது உண்மையானால், உன் நண்பன் மட்டும் ஏன் தப்பித்து ஓடி விட்டான்? '' என்று கேட்டார். ''அந்த முயற்சியில் தோல்வியுற்றால் அவனைத் திருடன் என்று நினைத்துத் தண்டனை விதிப்பீர்கள் என்ற பயத்தினால்தான் என் நண்பன் தப்பியோடி விட்டா ன். மகாராஜா, நான் சொல்வது உண்மை'' என்றான்.

''நீ சொல்வதை உண்மை என்று எப்படி நம்புவது?'' என்று கேட்டார் ராஜா. ''மகாராஜா நீங்கள் என்னை விடுதலை செய்தாலும் நான்உங்களை விட்டுச் செல்ல மாட்டேன். உண்மைக் குற்றவாளியைக் க ண்டுபிடிக்க உங்களுக்கு உ தவி செய்து, அ வன் பிடிபடும் வ ை ர உ ங்களுடனே இருப்பேன்'' என்றான் ஸ்ரீதரன்.

ஸ்ரீதரன்கூறுவதெல்லாம் உண்மை என்றே ராஜாவுக்குத் தோன்றியது. ஆகவே அவனுக்கு ஓர் உதவியாளனை அளிப்பதாகவும், உண்மையானத் திருடர்களை கண்டு பிடிக்கும் படியாகவும் கட்டளையிட்டான். அவ்வாறே மறுநாள் சேகரன் என்னும் காவலன் அவனுக்கு உதவி புரிய வந்தான். சேகரனிடம், ''எனக்கு என்னவோ, சத்திரத்து நிர்வாகியின் மீது சந்தேகம் ஏற்பட்டுஉள்ளது. ஆகவே நான் அதற்காக ஒரு திட்டம் வகுத்துள்ளேன். அ தன்படி ந டப்போம்'' என்று கூறி தன் திட்டத்தை சேகரனுக்கு விளக்கினான்.

அதன்படி ஏராளமான போலித் தங்கத்தாலான ஆபரணங்களை எடுத்துக் கொண்டு, அன்றிரவு அவனும் சேகரனும் அயல் நாட்டு வியாபாரிகளைப் போல் வேடமணிந்து சத்திரத்திற்குச் சென்று நிர்வாகியிடம், ''நாங்கள் அயல் நாட்டு வியாபாரிகள். நாளை அரண்

மனைக்குச் சென்று, ஆபரணங்கள் வியாபாரம் செய்யப் போகிறோம்'' என்று அறிவித்தனர்.

அன்றிரவு அமைதியாகக் கழிந்தது. மறுநாள் காலை இரு போலி வியாபாரிகளும் அரண்மனையை நோக்கிக் கிளம்பினர். சத்திரம் தலை நகரத்தின் எல்லையில் இருந்ததால், அரண்மனையிலிருந்து தொலைவில் இருந்தது. செல்லும் வழி தன்னந் தனியாக காட்டுப்பாதை. இருவரும் ஏற்கெனவே ஏற்பாடு செய்திருந்தபடி சில காவலர்கள் புதர்களில் பதுங்கி இருந்தனர்.

இருவரும் எதிர்பார்த்தபடியே, காட்டுப்பாதை வந்தவுடன் அவர்களை சிலர் வழிமறித்து அவர்கள் மீது பாய்ந்து அவர்களுடைய ஆபரண மூட்டைகளை கைப்பற்ற முயன்றனர். இருவரும் தான் கொண்டு வந்த மிளகாய் பொடியை அந்தக் கொள்ளையர்கள் முகத்தில் தூவினர். பதுங்கி இருந்த காவலர்கள் உடனே வெளி வந்து அந்தக் கொள்ளையர்களை சிறைப்பிடித்தனர். அவர்களை விசாரிக்கையில் சத்திரத்து நிர்வாகியே அவர்களைத் தூண்டியவன் என்றும் திருட்டுப் பொருட்களில் அவனுக்குப் பங்கு கொடுக்க வேண்டுமென்றும் தெரியவந்தன. ஸ்ரீதரனின் புத்தி நுட்பத்தையும் துணிவையும் மன்னர் வெகுவாகப் பாராட்டி குற்றவாளிகளுக்குத் தண்டனை விதித்தார்.''

இத்துடன் கதையை முடித்த பாட்டி, ''குழந்தைகளே! பார்த்தீர்களா, ஸ்ரீ தரன் தன்னுடையத் துணிச்சலினால் எத்தகைய சாதனை படைத்தான் என்று! ஸ்ரீதரன் கூட இருந்த உதவியாளன் சேகரன் வேறு யாருமல்ல. இளவரசரே அவ்வாறு சேகரனாக நடித்தார். அவர் ராஜாவிடம் ஸ்ரீதரனைப் பற்றி வெகுவாகப் புகழ்ந்தார். ஸ்ரீதரன் ராஜாவின் உதவியாளராகப் பதவி நியமனம் பெற்றான். இந்த கதையிலிருந்து நீங்கள் என்ன தெரிந்து கொண்டீர்கள்?'' என்றாள்.

எல்லாக் குழந்தைகளும் ஒரே குரலில், ''மனிதனுக்குத் துணிவே துணை'' என்று கோஷமிட்டனர்.





# மாய மந்திரவாதி

## 17

*(காளிவர்மன் மந்திரவாதி ஆகியோரிடமிருந்துத் தப்பிச் சென்ற மாயக்குரங்கு ஜிதகேதுவின் அரண்மனையை நோக்கிச் சென்றது. அரண்மனைக்குஅருகில் வித்தைகாட்டிக் கொண்டிருந்த குரங்காட்டியின் கரடி குரங்கின் மீது பாய்ந்தது. அந்த சமயம் அங்கு வந்த காவலர் தலைவன் குரங்கைக் கரடியிடமிருந்து காப்பாற்றி, மன்னரிடம் இழுத்துச் சென்றான். பிறகு...)*

அரண்மனைக்குள் முன்னேறிச் சென்று கொண்டிருந்த காவலர் தலைவன் சற்றே நின்று வித்தை காரனை நோக்கி, ''மன்னருடைய சபையில் இந்த கரடியுடன் செல்வது சரியல்ல என்று தோன்றுகிறது. கரடியின் முதுகில் அமர்ந்துள்ள குரங்கை நீ உன் தோளில் தூக்கிக் கொள்'' என்றான்.

வித்தைக்காரனும் தன் கரடியிடம் சென்று, ''என் புத்திசாலி நண்பா! குரங்கைக் கீழே இறக்கிவிடு'' என்றான். கரடி குரங்கை கீழே இறங்கிவிட, உடனே மாயக்குரங்கு தன் பொறுமையை இழந்து, ''முட்டாளே! மாய மந்திரவாதியால் பெருத்த ஆ பத்து வ ரப்போகிறது என்று ந ான் அ ப்போதிலிருந்து சொல்லிக் கொண்டேயிருக்கிறேன். ராஜா எங்கே? என் மந்திரக்கோல் எங்கே?'' என்று கத்தியது.

கூடியிருந்த கும்பல் குரங்கு மனிதனைப் போல் பேசுவதைக் கண்டு மகிழ்ச்சியில் ஆரவாரம்



செய்தது. அவர்களுள் குறும்புக்கார ஆள் ஒருவன் ஒரு குச்சியை எடுத்து வந்து குரங்கிடம் கொடுத்து, ''இதோ உன் மந்திரக்கோல்,'' என்று கிண்டல் செய்தான். ஆனால் காவலர் தலைவன், வித்தைக்காரன் முதல் அங்கு கூடியிருந்தோர் வரை அனை வரும் திகைக்கும்படி, குரங்கு ஒரு காரியம் செய்தது. அந்தக் குறும்புக் காரன் கொடுத்த குச்சியை மண்ணில் நட்டு வைத்து அதில் தாவியேறி தன் ஒற்றைக் காலைக் குச்சியின் மீது வைத்து நி ன்று ெ காண்டு கீ ழே சாயாமல் அபிநயம் பிடித்தது. ''முட்டாள்களா! பாருங்கள் நான் செய்வதை! இப்போதாவது நான் சாதாரணக் குரங்கு இல்லை என்பதை நம்புகிறீர்களா? அபாயமணி உங்கள் நாட்டுக்கு அடித்துக் கொண்டிருக் கிறது. நீங்கள் எல்லாரும் வித்தையை வேடிக்கை பார்த்துக் கொண்டு நிற்கிறீர்கள்! உங்களுக்குக் கொஞ்ச மாவது அறிவு இருக்கிறதா?'' என்று இளக்காரம் செய்தது. அப்போது காவலர் தலைவன், சற்றே ஆச்சரியத் துடன் குரங்கை அணுகி, ''உன்னை சாதாரணக் குரங்கு என்றுதான் நானும் நினைத்தேன். ஆனால் நீ அப்படி அல்ல என்று இப்போது தோன்று கிறது. நாட்டுக்கு வரும் அபாயத்தைப் பற்றி நீ கூறுவது உண்மையா?'' என்று கேட்டான்.

உடனே குரங்கு அவன்மீது பாய்ந்து அவன் கையிலிருந்த வாளை பிடுங்கிக் கொண்டு கோபத்துடன், ''மூளையற்றவர்களே! இன்னும் ஏன் வேடிக்கை பார்த்துக் கொண்டு நிற்கிறீர்கள்? உங்கள் மன்னரை என்னிடம் அழைத்து வாருங்கள்'' என்று கத்தியது.

அப்போது காவலர் தலைவனுக்கே குரங்கிடம் சிறிது பயம் ஏற்பட்டது. தலைவன் தயக்கத்துடன், ''மன்னர் சபையில் மந்திராலோசனையில் ஈடுபட்டுள்ளார். இந்த சமயம் நான் போய் அவரை அழைத்தால், என் தலை மண்ணில் உருளும்,'' என்றான். ''கோழையே, வழிவிடு! நானே உன் மன்னரிடம் செல்கிறேன்'' என்று கூறிவிட்டு குரங்கு கிடுகிடு வென முன்னேறியது. அதன்பின்னே மூச்சு வாங்க விரைந்த காவலர் தலையின் சபையில் அமர்ந்திருந்த மன்னன் ஜீதகேதுவை அணுகி, ''மன்னிக்கவும் மகாராஜா! இந்த மாயக்குரங்கு உங்களிடம் ஏதோ முக்கியமாக தகவல் கூற வேண்டும்.

என்ன சொல்லியும் கேட்காமல் பிடிவாதம் பிடித்து இங்கே வந்து விட்டது'' என்று பயந்து கொண்டே சொன்னான்.

ஆலோசனை நடக்கும் சமயத்தில் குறுக்கிட்ட காவலர் தலைவனைக் கோபத்துடன் பார்த்த மன்னர், அவனருகே இருந்த குரங்கைக் கண்டதும் பலமாக சிரித்தார். உடன் இருந்த மந்திரிகளும் இன்னும் பலரும் சேர்ந்து சிரித்தனர். திடீரென ஜிதகேது கடுகடுப்பானான். தலைவனை நோக்கி சீற்றத்துடன், ''முட்டாள்! ஒரு குரங்கு எனக்குத் தகவல் தெரிவிக்க விரும்பியது என்றவுடன் உனது நகரக் காவலை மறந்து விட்டு அதை உன் கூடவே அழைத்துக் கொண்டு என் சபைக்கு வர உனக்கு என்ன பைத்தியம் பிடித்திருக்கிறதா? உன்னைப் போன்ற கோழைகள் எனக்குத் தேவையில்லை. யாரங்கே! இவனை உடனே அழைத்துச் சென்று இவன் தலையை வெட்டுங்கள்!'' என்று இடி முழக்கம் செய்தான்.

உடனே மாயக்குரங்கு ''என் குரு வாழ்க!'' என்று கூவிக் கொண்டே மன்னனிடம் சென்றது. ''மன்னா! நான் சொல்வதை கவனமாகக் கேள்! நான் சாதாரணக் குரங்கு அல்ல. ஒரு பெரிய மாயாவாதியின் சீடன் நான். என் பெயர் பிராந்திமதி. காளிவர்மனும் ஒரு மாயமந்திரவாதியும் உன் நகரத்தை ஆக்கிரமிக்க வருகின்றனர். நீ எச்சரிக்கையாக இரு, இல்லையேல் அழிவு நிச்சயம்''



என்று பயமுறுத்தியது. உடனே சபையில் ஒரே கூச்சலும், குழப்பமும் ஏற்பட்டன. ஜிதகேது சபையில் இருந்தவர்களை நோக்கி கையமர்த்தி விட்டுப் பிறகு குரங்கு நோக்கி, ''நீ ஒரு மாயக்குரங்கு என்று தெரிகிறது. ஆனால் உன்னுடைய எச்சரிக்கை தேவையற்றது. அந்த துரோகி காளிவர்மனை நசுக்கிக் கொல்ல என் முதல் மந்திரி ஜீவகுப்தனை படையுடன் அனுப்பியுள்ளேன்'' என்றான்.

''மன்னா! அவர்களை காளிவர்மனும், அந்த மந்திரவாதியும் இந்நேரம் தீர்த்துக் கட்டியிருப்பார்கள். அந்த மந்திரவாதியின் சக்தியைப் பற்றி உங்களுக்கெல்லாம் ஒன்றும் தெரியாது. அந்த மந்திரவாதி வந்தால் அவனை என் கையிலுள்ள மந்திரக்கோலால்....'' என்று சொல்லிக்கொண்டே வந்த குரங்குக்கு அப்போதுதான் தொலைந்து போன



மந்திரக்கோலைப் பற்றி ஞாபகம் வந்தது. உடனே 'ஆ!' என்று அலறிக் கொண்டே காவலர் தலைவன் மீது பாய்ந்தது. ''என் மந்திரக்கோல் எங்கே என்று சொல்!'' என்று அவன் கழுத்தைப் பிடித்து இறுக்கியது.

''காப்பாற்றுங்கள்! ஐயோ! குரங்காரே! என்னை விட்டு விடுங்கள்! உங்கள் மந்திரக்கோலைப் பற்றி எனக்குத் தெரியாது'' என்றான் தலைவன். தலைவனை விடுவிக்க சில வீரர்கள் வாளுடன் குரங்கின் மீது பாய்ந்தனர். உடனே தலைவனை விட்டுவிட்டு, மீண்டும் மன்னனை நோக்கி, ''ஜிதகேது மன்னா, வரப் போகும் அபாயத்தைப் பற்றி அறியாமல், உல்லாசமாக நீ உன் சிம்மாசனத்தில் உட்கார்ந்து இருக்கிறாய். காளிவர்மனும் மந்திரவாதியும் உன் ஆட்களைத் தவிடு பொடி ஆக்கி விட்டு உன் நகரத்தை நோக்கி வந்து கொண்டிருக்கிறார். அவர்களோடு ஒரு பயங்கர ராட்சசனும் வருகிறான், ஜாக்கிரதை!'' என்றது.

''ராட்சசனா? அவன்யார்? நான் இதுவரை எந்த ராட்சசனையும் பார்த்ததில்லையே,'' என்றான் ஜிதகேது. ''உன் விருப்பம் சீக்கிரம் நிறைவேறும். அந்த ராட்சசன் உங்களை மூட்டைப் பூச்சியை நசுக்குவது போல் நசுக்கிக் கொன்று விடுவான்'' என்றது குரங்கு.

ராட்சசனுடைய வருகையைப் பற்றிக் கேள்விப்பட்டதும் உடனிருந்த மந்திரிகள் நடுங்க ஆரம்பித்தனர். ''மகாராஜா, அந்த ராட்சசன் கைகளில் சிக்காமல் நாம் ஓடிவிடலாம்'' என்று நாக்குழற உளறினர். அவர்களுடைய நடுக்கத்தைக் கண்டதும், ஜிதகேதுவின் கோபம் அதிகரித்தது. ''அடச்சீ! முதுகெலும்பற்ற கோழைகளே! நீங்கள் மந்திரிகளாக இருப்பதற்கேத் தகுதி இல்லாதவர்கள். ஆகா! என் முதல் மந்திரி ஜிவகுப்தன் மட்டும் இந்த சமயம் இங்கிருந்தால் உங்களைப் போல் பயந்து நடுங்காமல், பயனுள்ள யோசனையாக ஏதாவது கூறுவான்'' என்று அவர்களை நோக்கி சீறிய ஜிதகேது தனது சிம்மாசனத்திலிருந்து இறங்கிக் கீழே வந்தான். சபையிலிருந்த மற்றவர்களை நோக்கி, ''இந்தக் குரங்கு சொல்வது போல் உண்மையாகவே ஒரு ராட்சசன் நம்மைத் தாக்க வந்தால் நம்மை நாம் எப்படி பாதுகாத்துக் கொள்ளலாம்?'' என்று கேட்டான். ஒவ்வொருவருக்கும் தான் எப்படி

தப்பி ஓ டுவது எ ன்ற சி ந்தனை மட்டுமே இருந்ததால், பதில் கூறாமல் மௌனமாக நின்றார்கள். ''உங்களை நம்பி எந்த பிரயோ ஜனமுமில்லை. உங்களைவிட இந்த குரங்கே தேவலாம் என்று தோன்று கிறது. இதற்கு மூளையும் இருக்கிறது. மந்திரசக்தியும் இருக்கிறது. இந்த குரங்கு சொல்வதுபோல் அந்த மந்திர வாதியும் ராட்சசனும் சேர்ந்து ஜீவகுப் தனையே கொன்று போட்டு விட்டார்கள் என்று நினைக்கத் தோன்றுகிறது. இந்த சூழ்நிலையில் என் முதல் மந்திரியின் இடத்தை நிரப்ப வேறு ஒருவர் தேவை'' என்று கூறிய ஜிதகேது திடீரென குரங்கை நோக்கி, ''குரங்கே! உன்னையே என் முதல் மந்திரியாக இப்போதுமுதல் நியமனம் செய்கிறேன். வரப்போகும் எதிர்ப்பை எ வ்வாறு ச மாளிப்பது என்று யோசனை கூறுவாய்'' என்றான்.

மன்னனின் இந்த எதிர்பாராத வார்த்தைகளால் மிகுந்த ஆச்சரியமும் மகிழ்ச்சியும் அடைந்த மாயக்குரங்கு முதல் மந்திரியின் சிம்மாசனத்தில் அமர்ந்து கொள்ள முன்னேறியது. அந்த சமயம் சபையில் யாரும் எதிர்பாரா வண்ணம், ஜீவகுப்தன் நுழைந்தான். இறந்து விட்டான் என்று நினைத்த ஜீவகுப்தனை உயிரோடு பார்த்ததும் சபையோர் பலமாக கைகொட்டி மகிழ்ச்சியில் ஆரவாரம் செய்தனர். கிழிந்த உடை களுடனும், தலையில் மகுடம் இல்லாமலும் ஜீவகுப்தன் முதலில் நுழைய, அவன் பின்னால் சூரிய



பூபதியும் மற்றும் இரு வீரர்களும் வந்தனர். ''முதல் மந்திரி உயிருடன் உள்ளார்'' என்று எல்லாரும் மகிழ்ச்சி யுடன் கூவிக்கொண்டே ''முதன் மந்திரி ஜீவகுப்தர் வாழ்க'' என்று கோஷமிட்டனர்.

''மூளையற்ற மு ட்டாள்களே!'' என்று அந்த கோஷத்துக்கு நடுவே ஒரு குரல் கேட்டது. ''சபையிலிருந்து அறிவற்ற மூடங்களே! உங்களைத் தான் சொல்கிறேன்'' என்று கூவியது குரங்குதான் என்று இந்த முறை அறிந்தனர். ''என்னை முதல் மந்திரி யாக மன்னர் ஏற்கெனவே அறிவித்து விட்டார். இன்னும் ஏன் முதல் மந்திரி ஜீவகுப்தன் வாழ்க என்று கோஷ மிடுகின்றீர்கள்?'' என்றது குரங்கு.

குரங்கினைக் கோபத்துடன் பார்த்த சபையோர்களை திகைப்பில் ஆழ்த்துவதுபோல் ஜிதகேது முன் வந்து ''ஆம்! குரங்கு முதன் மந்திரி

என்று நான் அறிவித்தது அறிவித்தது தான். இனி அதுவே என்னுடைய முதல் மந்திரி. ஜீவகுப்தன் இனி முதல் மந்திரியில்லை'' என்றான்.

மன்னரின் இந்த அறிவிப்பைக் கேட்டதும் தன் தலையில் இடி விழுந்தது போல் அதிர்ச்சியுற்றான் ஜீவகுப்தன். உடனே அவன் கோபமெல்லாம் குரங்கின் மீது திரும்பியது. தன் வாளை உருவிக் கொண்டே தன் ஆசனத்தில் அமர்ந்திருந்த குரங்கை நோக்கிப் பாய்ந்து சென்ற ஜீவகுப்தன், ''இந்த நயவஞ்சகக் குரங்குக்கு முதல் மந்திரிப் பதவியா? நானிருக்கும் வரை அது ஒருக்காலும் நடக்காது. அந்த ராட்சசன் உக்கிரதண்டனிடமிருந்து இதன் உயிரைக் காப்பாற்றியதே நான்தான்! அப்படிப்பட்ட எனக்கே அது துரோகம் செய்வதா? ஏ குரங்கே! நீ செத்தாய் இப்போதே!'' என்று தன் வாளை ஓங்கினான்.

''ஜீவகுப்தா! நிறுத்து!'' என்று கத்திய மன்னன். ''அது ஒன்றும் சாதாரணக் குரங்கில்லை. பிராந்திமதி என்ற பெயர் கொண்ட மாயக் குரங்கு'' என்று இடைமறித்தான்.

''இல்லை மன்னா! என்னைத் தடுக்காதீர்கள்! மந்திரவாதியிடம் இருந்து மந்திரக்கோலைத் திருடிய திருட்டுக் குரங்கு இது. அந்த மந்திரக் கோல் இப்போது அதன் கையில் இல்லை. மந்திரக்கோல் இல்லாமல் இதற்கு சக்தியே எதுவும் கிடையாது. இதோ பாருங்கள் அதன் தலை தரையில் உருளுவதை'' என்று மீண்டும் வாளை ஓங்கினான்.

''குருவே காப்பாற்றுங்கள்!'' என்று வானில் ரப்பர்போல் துள்ளிக் குதித்த குரங்கு, வாள் வீச்சிலிருந்து தப்பி ஒதுங்கியது. உடன் தன் வாலைச் சுழற்றி பலமாக வீசி ஜீவகுப்தனின் கையிலிருந்த வாளைப் பற்றி இழுத்துத் தூக்கி எறிந்தது. கையில் இருந்த வாளை இழந்து நிராயுதபாணியாக நின்ற ஜீவகுப்தனின் மீது குறி வைத்துத் தன் வாளை ஓங்கியது.

(தொடரும்)





நவீன வேதாளக் கதை

# கவிமணியும் ரசிகமணியும்

**த**ன் முயற்சியில் சற்றும் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்திலேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழே இறங்கி அதைத் தூக்கிக் கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில், அதனுள் இருந்த வேதாளம் சிரித்துக் கொண்டே ''மன்னா, உனது லட்சியத்தை அடைவதற்காக நீ இவ்வாறு சிரமப்படுகிறாயே, உன் லட்சியம் நிறைவேறுமா? உன்னைப் போன்ற மன்னர்கள் சிலர் தான் நினைத்ததெல்லாம் நிறைவேறும் என்றும், தனது கட்டளையின்படியே எல்லாம் நடக்கும் என்ற அகம்பாவத்துடன் இருக்கிறார்கள். இப்படித்தான் மன்னன் வீராங்கன் ஒரு கவிஞரைத் தன்



கட்டளைக்குக் கீழ்ப்படிய வேண்டும் என்று நினைத்துத் தோல்வியுற்றான். அவனுடைய கதையை இப்போது உனக்குக் கூறுகிறேன் கேள்'' என்று கதை சொல்லத் தொடங்கியது.

சிந்தூரபுரி ராஜ்ஜியத்தை ஆண்டு வந்த வீராங்கன் கவிதைகளை மிகவும் ரசிப்பவன். ஒவ்வோர் ஆண்டும் விஜயதசமியன்று தன் சபையில் நாடெங்கும் உள்ள கவிஞர்களை வரவழைத்துக் கவிதை பாடச் சொல்லி கேட்டு ரசித்து வந்தான். நல்ல கவிதைகளை இயற்றுபவர்களுக்கு பரிசுகளும் வழங்குவதுண்டு. பரிசுக்குரிய கவிதைகளைத் தேர்ந்தெடுக்க தன் ஆஸ்தானக் கவிஞர்களையும் அருகே அமர்த்திக் கொண்டு அவர்களுடைய கருத்தைக் கேட்டு அதன்படி பரிசளித்து வந்தான். சிறந்த கவிஞர்கள் அறிமுகப்படுத்தப்பட்டு பரிசுகள் பெற்றால், தங்கள் பதவிக்கும், புகழுக்கும் பங்கம் விளையுமே என்ற பயத்தினால் ஆஸ்தானக் கவிஞர்கள் உண்மையான திறமைசாலிகளைப் பரிந்துரைப்பதில்லை. ஒவ்வோர் ஆண்டும் ஆஸ்தானக் கவிஞர்கள் தேர்வு செய்யும் கவிதைகள் மன்னனுக்குத் திருப்தியை அளிக்கவில்லை. அதைப் பற்றி முதல் மந்திரியிடம் உரையாடிய போது, அவரும், ''பிரபு, தாங்கள் கொடுக்கும் பரிசுகளைப் பெறவே பலரும் கவிஞர்கள் என்ற பெயரில் வருகின்றனர்'' என்றார்.

வழக்கப்படி அந்த ஆண்டும் கவிதைப் போட்டியின் முடிவுகளில் திருப்தியடையாத மன்னன் தற்செயலாக தனது ராணியிடம் அதைப் பற்றிக் குறிப்பிட்டான். ''வரவர நாட்டில் கவிதைகள் இயற்றும் திறமை குறைந்து கொண்டே வருகிறது. நல்ல கவிஞர்களே தற்சமயம் யாருமில்லை'' என்றான்.

அதைக்கேட்ட ராணி, ''அப்படி நினைக்க வேண்டாம். பல ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக சூரியன் உதிக்கிறான். அவனுடைய ஒளி இது வரை குறைந்ததில்லை. அதுபோல் சிறந்த கவிஞர்கள் எந்தக் காலத்திலும் உள்ளனர். இப்போதும் உள்ளனர். ஆனால் அவர்களை நம்மால் அறிய முடியவில்லை'' என்றாள்.

அவள் சொல்வதைக் கேட்ட மன்னன் ஆச்சரியத்துடன், ''ராணி, நீ எப்போது இவ்வளவு அழகான உவமைகளுடன் பேசக் கற்றுக்

கொண்டாய்? என்றான். ராணி வெட்கத்துடன், ''பிரபு, அந்த பெருமைக்குரியவள் நான்இல்லை. ஏனெனில் இந்த வார்த்தைகளை நம் சமையல்காரி நீலா சொல்லக் கேட்டேன்'' என்றாள்.

மன்னனின் ஆச்சரியம் இன்னும் அதிகரித்தது. ''ராணி, என்னால் நம்பவே முடியவில்லையே! சமையற் காரி நீலா எப்போது இவ்வளவு அழகான கவிதைநயம் பொருந்திய வார்த்தைகளைக் கற்றுக் கொண்டாள்? '' ''பிரபு, நாளுக்கு நாள் என் அழகு குறைவது போல் தெரிகிறது என்று நீலாவிடம் சொன்னேன். அதற்கு அவள் பதில் கூற மேன்மேலும் பேசிக் கொண்டே செல்கையில், அவளுடைய கவிதை நயம் பொருந்திய வார்த்தைகளை கேட்க நேரிட்டது. அவளையே நேரில் அழைக்கிறேன்'' என்றாள்.

சமையற்காரி நீலா மன்னன் முன் வந்தாள். மன்னனுடைய பாராட்டு களைக் கேட்ட நீலா வெட்கித் தலை குனிந்து ''மகாராஜா, சேற்றில் செந்தாமரை மலர்ந்தாலும் சேற்றுக்கு அது சொந்தமாகாது. அதேபோல் பிரம்மாவின் ஆசனமாக தாமரை இருந்தாலும் அதால் படைப்பாளி யாக ஆக முடியாது. அதுபோல் நான் பேசும் வார்த்தைகள், வேறு ஒருவரிட மிருந்து கற்றவை,'' என்றாள்.

''அவர் யார்? '' என்று மன்னன் கேட்க, நீலா, ''மகாராஜா, அவர் ஓர் ஏழைக் கவிஞர். பெயர் கவிமணி. என் வீட்டில்தான் விருந்தாளியாக ஒரு



மாதமாகத் தங்கியுள்ளார். அவரிட மிருந்து கற்றுக்கொண்டதைத் தான் நான் கூறுகிறேன்'' என்றாள். ''அப்படியா? அப்படிப்பட்ட சிறந்த கவிஞரை நான் உடனே காண வேண்டுமே! அவரை உடனே அரண்மனைக்கு வரச்சொல்'' என மன்னன் கட்டளையிட்டான்.

இதை நீலா கவிமணியிடம் கூறியதும் ''என் செவிகளால் எப்போது நடக்க முடியுமோஅப்போது வருவேன் என்று கூறு'' என்றார். இதை நீலா மன்னனிடம் கூறியதும் மன்னனுக்கு கவிமணி கூறியதன் பொருள் விளங்கியது. தான் வந்து மன்னனை சந்திக்க முடியாது என்றும், மன்னன் தான் அவரை நாடிச் செல்ல வேண்டும் என்றும் தன் குறிப்பால் உணர்த்துகிறார் என்று புரிந்து கொண்டான். ''சரி நீலா! நான் அவரை



எப்போது தனியே உன் வீட்டில் சந்திக்க முடியும் என்று கேட்டுவா'' என்றான் மன்னன்.

உடனே நீலா அவரை நாடிச் சென்று மன்னன் பார்க்க விரும்பு வதைக் கூறினாள். அதற்கு கவிமணி ''நான் பகலில் கவிதை எழுதுகிறேன். இரவில் என் கவிதைகளை ரசிப்பவர் களோடு அமர்ந்து உரையாடுகிறேன். ஆகவே என் ரசிகராக என்னை சந்திக்கலாம்'' என்றார்.

இதை மன்னனிடம் கூறியதும் மன்னனுக்கு கோபம் வந்து விட்டது. ''அந்தக் கவிஞர் தன்னை என்ன வென்று நினைத்துக் கொண்டிருக் கிறார்? அவர் என்னை நாளை சபையில் சந்திக்க வேண்டும். இது என்னுடைய கட்டளை'' என்றார்.

சற்று நேரத்தில் கவிமணியை சந்தித்து மீண்ட நீலா, ''மகாராஜா, அதிகாரத்திற்கு அவர் அடிபணிய மாட்டாராம். தாங்கள் தரு ம் தண்டனையைப் பற்றி அவருக்குக் கவலை இல்லையாம்'' என்றாள்.

இப்படிப்பட்ட ஒரு பதிலை சற்றும் எதிர்பாராத மன்னன் சில கணங்கள் திகைத்து நின்றான். ஆனாலும் அப்படிப்பட்ட கவிஞனை சந்தித்தே ஆ க வே ண்டும் என்ற ஆர்வத்துடன் அன்றிரவு யாரிடமும் சொல்லாமல் மாறு வேடமணிந்து மன்னன் நீலாவின் வீட்டிற்குச் சென்றான். அங்கே அந்த ஏழைக் கவிஞன் கவிமணி தனது ரசிகர்கள் புடைசூழ அமர்ந்து தன் கவிதைகளை அவர்களுக்குப் படித்துக் காட்டிக் கொண்டிருந்தான். மன்னன் கவிமணி யின் கவிதைகளை உன்னிப்பாகக் கேட்டான். அவ்வளவு சிறந்த கவிதை களை மன்னன் அதுவரை கேட்டதே யில்லை. கவிமணியின் கவிதைகளை வெகுவாக ரசித்த மன்னன், இறுதியில் கவிமணியிடம் சென்று ''கவிமணியே! நீங்கள் ஒரு சிறந்த கவிஞர் என்பதில் சந்தேகமேயில்லை. நீங்கள் இந்த நாட்டு மன்னன் நடத்தும் கவிதைப் போட்டியில் ஏன் இதுவரை கலந்து கொள்ளவேயில்லை? '' என்று மன்னன் கேட்டான்.

அதற்கு கவிமணி, ''மன்னன் தரும் பரிசுக்காக என் புலமையை விற்க எனக்கு அவசியம் இல்லை. மன்னர் உண்மையான ரசிகராயிருந்தால், அவரே என்னைத் தேடி வரட்டும்'' என்று மிடுக்குடன் பதிலளித்தான். உடனே, மன்னன் ''அவரால் உன்னை



எப்படித் தேடி வரமுடியும்? அவருக்கு ஏராளமான அலுவல்கள் உள்ளன. அவருக்கு நேரமே கிடையாதே!'' என்றான். ''நேரமே இல்லாதவருக்கு என் கவிதைகள் தேவையில்லை'' என்றான்.

இவ்வாறு மிடுக்குடனும், கர்வத்துடனும் கவிமணி பதிலளித்த போதிலும் மன்னனுக்கு ஏனோ அவன் மீது கோபமே உண்டாக வில்லை. மறுவார்த்தை பேசாமல் அரண்மனை திரும்பிய மன்ன னுடைய மனம் அலைபாய்ந்தது. ஏற்கெனவே பல நாட்களாகத் தன் ஆஸ்தானக் க விஞர்களின் ப ரிந்து ரைகள் மீது கொண்டிருந்த சந்தேகம் வலுத்தது. மறுநாள் சபை கூடியதும் மன்னன் தன் முதல் மந்திரியையும் ஆஸ்தானக் கவிஞர்களையும் கவிமணி தங்கிஇருக்கும் நீலாவின் வீட்டுக்கு அன்றிரவு மாறுவேடத்தில் செல்லும்படியும் அவனுடைய கவிதைகளைக் கேட்டபிறகு அவர் களுடைய கருத்துகளை தன்னிடம் கூறும்படியாகவும் கட்டளை யிட்டான். அதன்படியே அனைவரும் அன்றிரவு கவிமணியை நாடி மாறு வேடத்தில் சென்றனர்.

மறுநாள் சபை கூடியது. முதல் மந்திரி மன்னனிடம், ''அரசே! நீங்கள் கூறியபடி நேற்றிரவு நாங்கள் கவி மணியின்கவிதைகளைக் கேட்டோம். ஆஸ்தானக் கவிஞர்களின் கருத்துப் படி அவனுடைய கவிதைகள் பொருள் அற்றவை. கவிதை நயம், எதுகை, மோனை, கருத்து எதுவுமே சரியாக இல்லை'' என்றார். மன்ன னுடைய சந்தேகம் உறுதியானது.

''நிறுத்துங்கள் உங்கள் அபத்த மான பேச்சை!'' என்று சீறினான். ''நீங்கள் சென்றதற்கு முதல் நாளிரவு நானே கவிமணியிடம் சென்றிருந் தேன். என்ன அற்புதமான கவிதைகள் அவனுடையவை! ஆஸ்தானக் கவிஞர்களே, நீங்கள் எவ்வளவு மோசமான எண்ணமுடையவர்கள் சிறந்த கவிஞர்கள் பலரை முளை யிலே அழித்து விட்டீர்கள்! சென்று விடுங்கள் இங்கிருந்து!'' என்று உரத்த குரலில் கூறினான். இந்த செய்தி நாடெங்கும் பரவிவிட்டது.

அன்றிரவு மன்னன் அந்தப் புரத்திலிருந்த போது நீலா ''அரசே, கவிமணி உங்களை சந்திக்க சம்மதித்து விட்டார். நாளையே உங்களை இங்கே தேடி வருவார்'' என்றாள்.

''வேண்டாம் நீலா, அந்த மகாகவிஞன் என்னை நாடி வர வேண்டாம். நானே இன்றிரவு அவரை நாடிச் சென்று அழைக்கிறேன். அதுதான் மரியாதை'' என்றான்.

இந்த இடத்தில் கதையை நிறுத்திய வேதாளம், ''மன்னா! இந்த கவிமணியின் அகம்பாவத்தைப் பார்த்தாயா? ஒரு நாட்டு மன்னனையே எவ்வாறு அலைக்கழித்திருக்கிறான்? ஒரு ஏழைக் கவிஞன் மன்னனை நாடி வருவதே முறை. அதை விடுத்து கவிமணி மன்னனை நாடி வருகிறேன் என்று கூறியபோது மன்னன் ஏன் அதை மறுத்து தானே அவனிடம் சென்று அழைப்பதாகக் கூறினான்? இந்த என் கேள்விகளுக்கு விடை தெரிந்தும் நீ மௌனமாக இருந்தால், உன் தலை வெடித்து சுக்கு நூறாகும்'' என்றது.

அதற்கு விக்கிரமன், ''கவிமணி அகம்பாவம் கொண்டவனல்ல. உண்மையான படைப்பாளிகள் பொருளுக்கு ஆசைப்பட மாட்டார்கள். கவிமணி ஓர் அற்புதமான கவிஞன். அவனுக்குத் தன் புலமையின் மீது கர்வம் இருந்தது உண்மையாயினும் அது தவறல்ல. தவிர ஆஸ்தானக் கவிஞர்களின் சுயநல எண்ணங்களை நன்கறிந்திருந்தான்.

ஆனால் அரண்மனையில் மன்னன் ஆஸ்தானக் கவிஞர்களைக் கோபத்துடன் கடிந்து கொண்ட செய்தி வெளியானதும் அவனுக்கு எல்லா உண்மைகளும் புரிந்தன. தான் கவிமணியெனில், மன்னன் ஒரு ரசிகமணி என்று தெரிந்தது. ஆகவே தான் இறுதியில் தானே மன்னனை நாடி வர ஒப்புக் கொண்டான். அதேபோல் கவிமணியின் கவிதைகளை வெகுவாக ரசித்த மன்னன், அவனது சுய அபிமானத்தோடு கூடிய மிடுக்கான வார்த்தைகளைக் கேட்டு அவன் மேல் பெருமதிப்பு கொண்டான். ஆகவே மன்னன் கவிமணியை நாடிச் சென்றான்'' என்று பதிலளித்தான்.

விக்கிரமனது சரியான பதிலால் அவன் மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலுடன் இருந்த வேதாளம் மீண்டும் பறந்து சென்று முருங்கை மரத்தில் ஏறிக் கொண்டது.






## ஜூடோவின் பிறப்பிடம்



கிழக்காசிய நாடுகளில் உருவானதாகக் கருதப்படும் ஜூடோ, கராத்தே, குங்ஃபூ ஆகியவற்றின் மூலம் கேரள மாநிலத்து களரிப்பயற்று தான். கேரளத்தின் புகழ்பெற்ற கதக்களி நடனத்தில் களரிப்பயற்றின் அசைவுகளைப் பல இடங்களில் காணலாம் கொல்களி, வேலக்களி, யாத்ராக்களி ஆகியவையும் களரிப்பயற்றை ஆதாரமாகக் கொண்டவை தான். போதிதர்மா என்ற இந்திய புத்தத் துறவி 5ஆம் நூற்றாண்டில் சீனாவுக்கு விஜயம் செய்தபோது அங்குள்ள புத்தத் துறவிகளுக்கு ஷேயோலின் கோயிலில் களரிப்பயற்று போர்க் கலைகளைக் கற்றுக் கொடுத்தார். காலப்போக்கில் அவையே ஜூடோ, கராத்தே, குங்ஃபூ என்ற பெயர்களில் பிரபலமாயின.

## இரண்டாவது அலெக்சாண்டர்

கி.மு.327ஆம் ஆண்டு இந்தியாவின் மீது படையெடுத்த கிரேக்க வீரர் அலெக்சாண்டரைப் பற்றி மட்டுமே நாமறிவோம். ஆனால் ஆயிரம் ஆண்டு களுக்குப் பிறகு, இந்தியாவை ஆண்ட மற்றொரு மன்னர் தன்னை இரண்டாவது அலெக்சாண்டர் என்று பெருமையுடன் அழைத்துக் கொண்டார். கல்ஜி வம்சத்தைச் சேர்ந்த அலாவுதீன் கல்ஜி எனும் மன்னர், தனது படையெடுப்பில் வரிசையாக சித்தோர், ரணத்தம்போர் நாட்டு இந்து மன்னர்களை வென்று தனக்குத்தான் சிகந்தர்-இ-சானி என்ற பட்டத்தை சூட்டிக் கொண்டது மட்டுமின்றி தான் அச்சிட்ட தங்க நாணயங்களிலும் அப்பட்டத்தைப் பொறித்தார்.



அயல் நாட்டுக் கதைகள் (பாபிலோன்)

# படைக்கும் உணவை தெய்வம் உண்ணுமா?

மன்னரின் அரண்மனைக்குப் பின்னால் ஒரு குன்று இருந்தது. அந்தக் குன்றின் மேல் ஒரு கோயில் இருந்தது. கோயில் கருவறையில் இருந்த தெய்வம் தனக்குப் படைக்கப் படும் உணவையெல்லாம் உண்மை யாகவே உண்டு விடும். அதைப்பற்றி கோயிலின் பூசாரி பிரசாரம் செய்த தால், அந்த தெய்வத்தின் புகழ் சுற்று வட்டாரங்களுக்கெல்லாம் பரவியது. ஒவ்வொரு நாள் மாலையும் கருவறையில் பல நிவேதனப் பொருட்கள் படைக்கப்பட்டு கோயிலின் கதவுகள் மூடப்பட்டு விடும். மறுநாள் காலை அங்கு சென்றால் நிவேதனம் படைத்த தட்டுகள் காலியாக இருக்கும். இந்த அதிசயத்தைக் காண அரச குடும்பத்தினர் உட்பட ஏராளமான பக்தர்கள் தினமும் காலை நேரத்தில் கோயில் கருவறைக் கதவுகள் திறக்கப் படும் நேரத்தில் அங்கே கூடுவது உண்டு. தெய்வத்தின் படையலுக்காக அரண்மனையில் ஒரு தனி சமையல் அறையே இருந்தது. அங்கு சமைத்த பதார்த்தங்களைத் தவிர பொது மக்களும் தங்கள் வீடுகளில் சமைத்த உணவுப் பொருட்களை நிவேதன மாக கோயிலில் தெய்வத்தின் முன் வைப்பதுண்டு. சில நாட்கள் தனக்குப் பிடித்த சில விசேஷ பண்டங் களை படையல் செய்யுமாறு தெய்வம் கட்டளையிடுவதுண்டு. பூசாரி தெய்வத்தின் கட்டளையை அரண்மனையில் வந்து தெரிவித்ததும் அதற்கேற்ப விசேஷ பண்டங்கள் அன்று தயாரிக்கப்பட்டு படை யலுக்கு அனுப்பப்படும்.



ஒருநாள் டேனியல் என்ற அறிஞர் மன்னருடன் உரையாடிக் கொண்டி ருந்தார். அப்போது மன்னரை அவசர மாகக் காண வந்த பூசாரி டேனியலைக் கண்டதும் தயங்கி நின்றான்.



பூசாரியிடம், மன்னர் ''சொல்ல வேண்டியதை இங்கேயே சொல்! என்றார். ஆனால் டேனியல் முன்னிலையில் பே பச விரும்பாத பூசாரி அரசருடன் தனிமையில் பேச வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தான். அரை மனதுடன் எழுந்து தனியே சென்று பூசாரி சொல்வதைக் கேட்ட பிறகு, மன்னர் திரும்பி வந்தார்.

''அரசே! நீங்கள் தவறாக நினைக்கவில்லையெனில் பூசாரி தங்களிடம் என்ன கூறினான் என்று நான் தெரிந்து கொள்ளலாமா? '' என்று டேனியல் வினவினார்.

''தாராளமாக! வேறொன்றுமில்லை! இன்று வழக்கமாகப் படைக்கப்படும் உணவைப் போல் இரு மடங்கு அதிக உணவும், ஏராளமான விசேஷ இனிப்புப் பண்டங்களும் வேண்டும் என்று இறைவன் கட்டளையிட்டிருக்கிறார். அவ்வளவுதான்!'' என்றார் மன்னர். ''அப்படியா! நான் எதிர்பார்த்ததுதான்!'' என்று கூறிய டேனியல் பலமாக சிரித்தார்.

''நீ எதிர்பார்த்தாயா? உனக்கு எப்படித் தெரியும்? '' என்று ஆச்சரியத்துடன் மன்னர் கேட்டார்.

''அரசே! உங்களிடம் அதை இப்போது விளக்கிக் கூற இயலாத நிலையில் நான் இருக்கிறேன். நான் சந்தேகப்படுவதைக் கூறினால் நீங்கள் பெருத்த அதிர்ச்சிக்கு உள்ளாவீர்கள்!'' என்று டேனியல் புதிர் போடுவது போல் கூறினார்.

மன்னர் டேனியல் கூறுவதில் உட்பொருள் என்ன என்று அறிய ஆவல் கொண்டு, அவரை சொல்லுமாறு தூண்டினார். தன் சந்தேகம் தெளிந்த பிறகு மறுநாள் காலை பதில் கூறுவதாகவும் அன்றிரவு கோயில் கதவுகள் மூடப்படுமுன் கருவறையைச் சுற்றி வலம் வர அனுமதி வழங்க வேண்டுமென்றும் டேனியல் கோரினார். மன்னரும் அதற்கு உடன்பட்டார்.

அன்றிரவு அதிகப்படியான உணவும், விசேஷத் தின்பண்டங்களும் படைக்கப்பட்டபோது டேனியலும் மன்னரும் கருவறையில் இருந்தனர். கதவுகள் மூடப்படுமுன் கருவறையில் தெய்வத்தைச் சுற்றி மூன்று முறை டேனியல் வலம் வந்தார். பூசாரிக்கு அது கொஞ்சங்கூட பிடிக்கவில்லை.



கோயிலை விட்டு வெளியே வந்ததும், மன்னர் டேனியலிடம் ''இறைவனுடைய படையலுக்காக என்னுடைய சமையல்காரனையே முழுப்பொறுப்பில் அமர்த்தியதால் எனக்கு வேண்டிய எதுவும் உண்ணக் கிடைக்கவில்லை. நான் அரைப் பட்டினி!'' என்றார்.

''ஐயோ பாவம்! பூசாரிக்காகவும் அவன் விருந்தினர்களுக்காகவும் நீங்கள் இன்று அரைப் பட்டினி யாயிருக்கிறீர்கள்'' என்று டேனியல் விமர்சனம் செய்தார்.

''தவறாகச் சொல்கிறாய் டேனியல்! இறைவனுக்காக இருந்தேன்,'' என்று மன்னர் டேனியலைத் திருத்த முயற்சிக்க ''இறைவனுக்காகவா!'' என்று கூறி டேனியல் விழுந்து விழுந்து சிரித்தார். மன்னருக்கு ஒன்றும் விளங்கவில்லை.

மறுநாள் காலை மன்னர் முன்னிலையில் கருவறைக் கதவுகள் திறக்கப்பட்டன. அரண்மனை யிலிருந்து படையலுக்கு அனுப்பப் பட்டிருந்த உணவு வகைகள் நிரம்பிய தட்டுகள் காலியாக இருக்க பொது மக்கள் படைத்த உணவுகள் அப்படியே இருந்தன. அதைக்கண்ட மக்கள் ''நமது படையல் இறைவனுக்குப் பிடிக்கவில்லை போலும்!'' என்று வருந்தினர். அதைக் கேட்ட டேனியல் மீண்டும் பலமாகச் சிரித்து, ''அரசே! தெய்வம் எங்காவது உண்மையாகவே நாம் படைப்பதை உண்ணுமா? அப்படியே உண்டாலும், அன்பே உருவான இறைவன் நாம் படைப் பதை மகிழ்ச்சியோடு ஏற்பாரே தவிர தனக்கு இது வேண்டும் அது வேண்டும் என்று கட்டளையிடு வாரா? நீங்கள் எப்படி இதை யெல்லாம் நம்புகிறீர்கள்?'' என்று கேட்டான். மன்னருக்கு மீண்டும் கோபம் உண்டாக, டேனியலை நோக்கி, ''இறைவன் நம் படையலை உண்ணவில்லை என்றால் வேறு யார் உண்ணுகிறார்கள்?'' என்று கேட்டார்.

''இறைவனின் பெயரைச் சொல்லி

உங்களையும் மக்களையும் ஏமாற்றி வரும் பூசாரிதான்!'' என்றார் டேனியல். ''டேனியல் நீ வீணாக பழி சுமத்துகிறாய்!'' என்றார் மன்னர்.

''அரசே! நான் சொல்வதை நீங்கள் நம்பவில்லையெனில், என்னுடன் வாருங்கள். தெய்வத்தின் பின்புறம் செல்வோம்'' என்று கூறி மெழுகு வர்த்தி ஏந்திக் கொண்டு டேனியல் மன்னரை அழைத்துச் சென்றார்.

அங்கே கருவறையின் ஒரு மூலையில் ஒரு ரகசிய சுரங்கப்பாதை தென்பட்டது. அதன் அருகிலிருந்து கருவறை எங்கும் தரையில் சாம்பல் பொடி காணப்பட சாம்பலில் பதிந்த கால் தடங்கள் தென்பட்டன.

''இப்போது புரிகிறதா மன்னரே! ஒவ்வொரு இரவும் பூசாரி இந்த சுரங்கப்பாதையின் வழியே வந்து கருவறைக்குள் நுழைந்து படைத்த உணவுப் பொருட்களை எடுத்துச் சென்று விடுகிறான். பூசாரியின் சம்பந்திரமார்கள் விருந்தாளிகளாக நேற்று வந்திருந்ததை நான் அறிந்தேன். அவர்களுக்காக இறைவனின் பெயரால் அதிக உணவு பூசாரி கேட்பான் என்று நான் எதிர் பார்த்தேன். அதனால் நேற்றிரவு கதவுகள் மூடப்படும் முன், கருவறையைச் சுற்றி வந்து சாம்பல் பொடியைத் தூவினேன். இரவு நேரத்தில் படையலைத் திருட வரும் பூசாரியின் கால் தடங்கள் சாம்பலில் படியுமென்பது எனக்குத் தெரியும்'' என்று கூறி முடித்தார் டேனியல்.

''தான் இத்தனை நாட்களாக பூசாரியால் ஏமாற்றப்பட்டு வந்ததை அறிந்த மன்னர் அதிர்ச்சியால் சமைந்து போனார். பூசாரியைக் கைது செய்ய உத்தரவிட்ட மன்னர், ''கடவுளின் பெயரால் இப்படி எல்லாம்மா மோசடி செய்வார்கள்?'' என்று டேனியலைக் கேட்க, ''பல சமயங்களில் இப்படிப்பட்ட நயவஞ்சகர்களால் கடவுளும் துன்புறுகிறார்'' என்றார் டேனியல்.



# செய்திச்சுடர்



## சிலைக்குப் பாதுகாப்பு

கன்னியாகுமரியில் பயணிகள் பெருமளவில் கண்டு மகிழ்பவை விவேகானந்தர் நினைவுச் சின்னமும், திருவள்ளுவர் சிலையும் தான். கடலின் நடுவே ஒரு பெரிய பாறையின் மீது அமர்ந்து விவேகானந்தர் தியானம் செய்ததுண்டு. அந்தப் பாறையின் மீதுதான் அவருடைய நினைவுச் சின்னம் எழுப்பப் பட்டுள்ளது. அதற்கு அருகிலேயே, உலகப் புகழ் பெற்ற தமிழ் வேதமான திருக்குறளை இயற்றிய திருவள்ளுவர் சிலையும் நிறுவப்பட்டுள்ளது. 133அடி உயரமுள்ள இந்த சிலை ஐந்து ஆண்டுகளுக்கு முன் கடலின் நடுவில் உருவாக்கப்பட்டது. இப்போது அந்த சிலையைப் பாதுக்காக்க பாலி-சிலிகான் என்ற ரசாயான பொருளால் சிலை முழுதும் பூசப்பட்டுள்ளது. உலர் நீராலான கடற்காற்றிலிருந்து சிலையைப் பாதுகாக்கவே இந்த ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

## 38வது முறையாகப் படையெடுப்பு

ஸ்காட்லாந்தைச் சேர்ந்த ராபர்ட் ப்ரூஸ் என்பவர் ஆங்கிலேயர்களால் போரில் ஏழு முறை தோற்கடிக்கப்பட்ட பின்னரும், அவர் ஒரு குகையில் ஒரு சிலந்தி தான் கட்டும் வலை மீண்டும் மீண்டும் அறுந்து போனாலும் சலிக்காமல் வலை பின்னுவதைக் கண்டு தன் சலிப்பை மறந்து மீண்டும் போரிடத் தயாரானாராம். அதுபோல் ராஜஸ்தானைச் சேர்ந்த ஷிவ் தவன் யாதவ் என்பவர் பள்ளியிறுதித் தேர்வில் 37 முறை பங்கேற்று தோல்வியடைந்த பின்னும் மனம் தளராது 38வது முறையாக தேர்வு எழுதவிருக்கிறார். தேர்வில் வெற்றி பெற்ற பிறகே மணம் புரிந்து கொள்ள முடிவு செய்து தனது திருமணத்தை ஒத்திப் போட்ட அவருக்கு இன்று வயது 56. இன்னும் திருமணமாகவில்லை.



புனித தாமஸ் உயர்நிலைப் பள்ளியில் மற்றொரு தினம்.

மேஜர் சூர்யராஜ் ஆசிரியர்கள் அறையில் இருக்கிறார். உடற்பயிற்சி வகுப்பு எடுக்க கிளம்ப தயாராக இருக்கிறார்.

அப்போது திடீரென்று...




ஜீ-மேனுக்கான வேலைதான் இது.

இதற்கிடையே சற்று தூரத்திலே...

டெர்ரோலீன் தன் அனைத்து பணத்தையும் மிக அதிக அளவில் உற்பத்தி செய்யும் அதிநவீன மெஷீன்களில் முதலீடு செய்துள்ளான்.

இவையே மனித இனத்தை அழிக்கும் மெஷீன்கள்.

உலகின் மிகப் பலம் பொருந்திய படைகளை வீழ்த்தப் போதுமான அளவு சுட்டுத் தள்ளும் ஆற்றல் படைத்த கொடூரமான அன்ட்ராய்ட்ஸ்.

இந்த நிலைல தான் இது இருக்கு ஜீ-மேன். நீங்க என்ன செய்ய வேணும்னு நான் சொல்லத் தேவையில்லை.







சூர்யராஜ் தனக்குப் பிடித்தமான சக்தியின் ஆகாரமான ஒரு **பார்லே-ஜீ** பேக்கை சாப்பிடுகிறான். ஜீ-மேன் ஆவதற்கு முன் சூர்யராஜ் ஒரு சில விநாடிகளுக்கு சூரியனிலிருந்து ஒளியைப் பெறுகிறான் என்று வரலாறு கூறுகிறது. அதனால் தான் அந்த ஒரு சில விநாடிகளுக்கு உலகத்தில் இருள் சூழ்கிறது போலும்...









அந்த ரகசிய படை டவரின் கீழே 300 மைல்களில் உள்ளது.

யாரும் என்னைப் பாக்காதபடி நான் எப்படி அங்கே போய் சேர்றது ?

சிவப்பு ஆடை போட்டிட்டிருக்கற ஒரு நபரை யாரும் பார்க்காதபடி ரொம்ப தூரம் போக முடியாது...

ராத்திரி ஆகற வரைக்கும் காத்திருக்கத்தான் வேணும்.

சூரிய அஸ்தமனம் ஆன பின்...

ஒளியைப் போன்ற வேகத்தில் செல்லும் ஜீ-மேன் சுற்றிச் சுற்றிப் போகும் பாதையைக் கடந்து போகிறான்.

டெர்ரோலீன் தங்கியுள்ள இடத்தில் இருக்கும் 24'' தடிமனான ஸ்டீல் பாதுகாப்புக் கதவின் அருகே ஜீ-மேன் சென்றடைகிறான்.

ஜீ-ஃபோர்சில் இருந்து சிலரைக் கூப்பிடுகிறான்.

KABOOM

டக்...
டக்...

அது ஜீ-மேன் தானே?
ஏன் இத்தனை நேரமாச்சு?
இந்த எலிக்குட்டி என்னோட
மோதறதை பாக்கத்தான்
நான் காத்திருந்தேன்...
ஹ... ஹ... ஹ... ஹா

வராம இருக்கறதோடு வந்தது ரொம்ப நல்லதாப் போச்சு... ஏன்னா, நான் மத்தவங்களை எப்போதும சந்தோஷப்படுத்த நெனைக்கிறேன்

நல்லது, நல்லது என்னோட ஆயுதங்கள் எல்லாம் கொஞ்சம் துருப்பிடிக்க ஆரம்பிச்சிடுச்சு இங்க கிடைச்ச பிராக்டிஸ்ல

ஆனா இதெல்லாம் இங்க ஒண்ணும் நடக்காது தெரியுமா... ஹி... ஹி...

டெர்ரோலீன், ஆனந்தம் எல்லாம் என்னோடது.






அன்ட்ராயிட்களுடன் தன்னந்தனியாக போர் செய்து ஜீ-மேன் வெல்ல முடியுமா?
அன்ட்ரோ மேனியா I - பகுதி 2ன் பரவசமூட்டும் சாகஸத்தை அடுத்த இதழில் பார்க்கவும்.

PARLE

புதிர்

G-man

1. குளுக்கா இதில் மறைந்திருந்தான் ______________
   க. வடிகால் குழாய்
   ஆ. நீர்த் தொட்டி
   இ. பள்ளிக் கட்டிடம்

2. நியூரால் ____________ பயன்படுத்தி குழந்தைகளின் எண்ணத்தைக் களவாடுகிறான்.
   க. மைண்ட் ரெய்டர்
   ஆ. ட்ரீம் மெஷீன்
   இ. மைண்ட் கண்ட்ரோல்

3. ஜீ-மேன் நியூராலை____________சண்டை போடுகிறான்.
   க. மைண்ட் ஸ்கேபில்
   ஆ. மைண்ட் கேலக்சியில்
   இ. டைமன்ஷன் Xல்

4. குளுக்காவைத் தோற்கடிக்க ஜீ-மேன் அவன் மீது ________ திருப்புகிறான்.
   க. நீராவியை
   ஆ. தண்ணீரை
   இ. ஐஸை

5. நியூராலின் மெஷீன் ஒரு பாழடைந்த__________ வைக்கப் பட்டுள்ளது.
   அ. குகையில்
   ஆ. கிடங்கில்
   இ. பள்ளிக்கூடத்தில்

6. குளுக்கா______________ ஜீவாதார சத்திலிருந்து உருவாக்கப்பட்டான்.
   அ. தாவரத்தின்
   ஆ. வைரஸின்
   இ. வேறு ஒரு பொருளின்

விடை : 1-ஆ, 2-அ, 3-அ, 4-அ, 5-ஆ, 6-இ

PARLE

# CROSSWORD





Across
1. G-man's Power Supply
2. ______ Suryaraj
3. The Water Monster's real name
4. The alien being that guides G-man
5. The island on which Terrolene's Childotron is kept

Down
1. The Water Monster's hiding place
2. Terrolene's biggest enemy
3. The inventor of the Mind Raider
4. Suryaraj fought in the Indian _____

POWER SUPPLY FOR







Visit: www.parleproducts.com

தமிழ் நாடு மாநிலத்து நாட்டுப்புறக் கதை

# கெட்டிக்கார மருமகள்

ராமநாதபுரத்தில் வசித்து வந்த ஒரு பணக்கார வியாபாரிக்கு பாக்கிய நாதன் என்று ஒரு மகன் இருந்தான். சிறு வயது முதலே அவனுக்கு சாமர்த்தியம் என்பது சிறிதுமில்லை.

''இவனை நினைத்தால் எனக்குக் கவலையாக இருக்கிறது. இவன் எதிர் காலத்தில் எப்படி காலந்தள்ளுவான்?'' என்று வியாபாரி தன் மனைவியிடம் குறைப்பட்டுக் கொண்டார்.

அவருடைய மனைவி, ''நீங்கள் ஆரம்பத்திலிருந்தே உங்களுடைய வியாபாரத்தில் அவனை ஈடுபடுத்தி இருந்தால், இப்படி ஆகியிருக்குமா? எல்லாம் உங்கள் தவறு '' என்று அவரையே குறை கூறினாள். உடனே அவரும் பாக்கியநாதனை அழைத்து, ''மகனே நாளை முதல் நீ என்னுடன் கடைக்கு வந்து வியாபாரத்தை கவனி'' என்று உத்தரவிட்டார்.



மறுநாள் பாக்கியா தன் தந்தையுடன் கடைக்குச் சென்றான். ஆனால் அங்கு வியாபாரத்தை கவனிக்காமல் மற்ற பணியாளர்களுடன் வீணாக அரட்டை அடிப்பதில் ஈடுபட்டான். ஒரு நாள் கடையை விட்டு வெளியே ஊர் சுற்றப் போனவன் மீண்டும் கடைக்கே வரவில்லை.

மீண்டும் கவலையில் ஆழ்ந்த வியாபாரியைப் பார்த்து, பாக்கியாவின் தாய், ''பேசாமல் அவனுக்கு ஒரு கால்கட்டு போடுங்கள். பொறுப்பு தானாக வந்து விடும்'' என்றாள்.

''அதுவும் நல்ல யோசனைதான்'' என்ற வியாபாரி, ''ஆனால் அவனுடைய திருமணத்தைப் பற்றி யோசிக்குமுன், அவனுடைய புத்தி சாலித்தனத்தை இன்னொரு முறை சோதிக்க விரும்புகிறேன்'' என்றார். பிறகு தன்னிடமிருந்து மூன்று ரூபாய் நாணயங்களை எடுத்து அவளிடம்

கொடுத்து ''இந்தா இந்த நாணயங்களை பாக்கியாவுக்குக் கொடு. ஒரு ரூபாய்க்கு அவன் விரும்பியதை வாங்கி சாப்பிடட்டும். ஒரு ரூபாயை ஆற்று நீரில் எறியச் சொல். மீதி ஒரு ரூபாயை வைத்துக் கொண்டு அதில் தான் கொஞ்சம் சாப்பிட்டு விட்டு, கொஞ்சம் ஏதாவது குடித்து விட்டு, மிஞ்சியதை தோட்டத்தில் நட்டு வைக்கவும், பசு மாட்டுக்குக் கொடுக்கவும் சொல். அதிலிருந்து அவன் எவ்வளவு புத்திசாலி என்று தெரிந்து கொள்வோம்'' என்றார்.

மறுநாள் தன் தாய் கொடுத்த மூன்று ரூபாய்களை வாங்கிக் கொண்டு பாக்கியா வீட்டை விட்டுக் கிளம்பினான். கடைக்குச் சென்று ஒரு ரூபாய்க்கு பக்கோடா வாங்கி சாப்பிட்டான். அடுத்து ஆற்றங் கரைக்குப் போனான். தன் தந்தை சொல்லியபடி ஒரு ரூபாய் நாணயத்தை ஆற்று நீரில் எறிய வேண்டும். ஆனால் அவ்வாறு செய்ய அவனுக்கு மனம் வரவில்லை. என்ன செய்யலாம் என்று யோசித்துக் கொண்டிருக்கையில் கோயில் அர்ச்சகரின் பெண்ணான பாகீரதி அருகில் வந்து ''அப்படி என்ன யோசித்துக் கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டாள். அதற்கு அவன் ''ஒன்றுமில்லை பாகீரதி! இந்த ஒரு ரூபாய் நாணயத்தை ஆற்றில் எறியும் படியாக என் தந்தை சொல்லி இருக்கிறார். அப்படி அவர் ஏன் சொன்னார் என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்'' என்றான்.



''அட அசடே!'' என்று சிரித்த பாகீரதி ஒரு ரூபாயை நீ பத்திரமாக வைத்துக் கொள்ள வேண்டும் என்பதே அதன் பொருள்'' என்றாள்.

''சரிதான்! அப்படியோர் உள்ளர்த்தமா? மீதி ஒரு ரூபாய்க்குள் நான் நான்கு அல்லது ஐந்து பொருட்களை வாங்க வேண்டும். அது எப்படி முடியும்? அதற்கும் நீயே ஏதாவது யோசனை சொல்லேன்'' என்றான். பிறகு அவன் தாய் மூலமாக தந்தையிட்ட கட்டளையை விளக்கிக் கூறினான். ''அது ஒன்றும் சிரமமில்லையே! நீ பேசாமல் ஒரு முலாம் பழத்தை ஒரு ரூபாய் கொடுத்து வாங்கு. அதில் உனக்கு சாப்பிடவும் குடிக்க சாறும் கிடைக்கும். அதன் விதைகளை தோட்டத்தில் நட்டுவை. தோலை பசு மாட்டுக்குக் கொடுத்து விடு'' என்றாள்.

''ஆகா! என்ன அற்புதமான யோசனை!'' என்று மகிழ்ந்த பாக்கியா அவள் சொன்னபடியே செய்து விட்டு, தன் தாயிடம் சென்றான்.

மிக சாமர்த்தியமாக ஒரு ரூபாயை திருப்பிக் கொடுத்துவிட்டு, தான் வாங்கி வந்து முலாம் பழத்தையும் காட்டியவுடன், அவனுடைய புத்தி சாலித்தனத்தைக் கண்டு வியந்த அவன் தாய் பாக்கியாவின் தந்தையிடம் நடந்ததைக் கூறினாள்.

ஆனால் பாக்கியாவின் தந்தை ''இது நமது பிள்ளை சுயமாக செய்ததில்லை'' என்று அறிந்து அவனைக் கூப்பிட்டு ''பாக்கியா! உனக்கு இந்த யோசனை யார் சொல்லிக் கொடுத்தது?'' என்று கேட்டார்.

பாக்கியாவும் உண்மையை மறைக்காமல் ''அர்ச்சகர் மகள் பாகீரதி'' என்றான். ''ஆகா! அந்த பாகீரதி மிக புத்திசாலிப் பெண் என்று தோன்றுகிறது'' என்று கூறிய அவர், தன் மனைவியிடம் ''நமக்குத் தகுந்த மருமகள் பாகீரதி தான்'' என்றார்.

இருவரும் அர்ச்சகரைக் கலந்து ஆலோசித்து அவரின் மகளுடன் பாக்கியாவின் திருமணம் செய்வதற்கு முடிவு செய்தனர்.

திருமணம் முடிந்து சில நாட்கள் ஆயின. ஒருநாள் பாகீரதி தன் தாய் வீட்டுக்குச் செல்ல விரும்பியதால் பாக்கியா அவளை பிறந்த வீட்டுக்கு அழைத்துச் சென்று விட்டு விட்டு, வீடு திரும்பினான். மறுநாள் அவன் தந்தை, அவனையும் வேலைக்காரனையும் பக்கத்திலுள்ள நகரத்திற்கு விற்பனைப் பொருட்கள் வாங்கி வர அனுப்பினார். பொருட்கள் வாங்கத் தேவையான பணம் எடுத்துக் கொண்டு நகரத்தை அடையும் போது இரவு ஆகிவிட்டதால், பாக்கியாவும் வேலைக்காரனும் ஒரு விடுதியில் தங்கினர். அந்த விடுதியின் சொந்தக்காரியான ஓர் இளவயதுப் பெண் மணி, பாக்கியாவிடம் நிறையப் பணம் இருப்பதை அறிந்து கொண்டு, அவனை ஏமாற்றிப் பணம் பறிக்க திட்டமிட்டாள். இரவு உணவருந்திய பிறகு, அவள் பொழுது போக்க பாக்கியாவை சீட்டாட அழைத்தாள். அவள் சொல்லை மறுக்க முடியாத பாக்கியா சீட்டாட அமர்ந்தான். ஒரே ஒரு காடா விளக்கு மட்டுமே எரிந்து





இவ்வாறு அவனை நாடகமாடி ஏமாற்றி விட்டாள். மறுநாள் பொழுது விடிந்ததும் அவள் பாக்கியாவிடம், ''நீ பணம் தர வேண்டி இருப்பதால், உன்னை வெளியே செல்ல விடமாட்டேன். உன் வேலைக்காரனை ஊருக்கு அனுப்பி பணம் எடுத்து வரச் சொல். அதுவரை நீ இங்கேயே இரு'' என்று கூறி விட்டாள்.

கொண்டிருந்த அறையில் இருவரும் சீட்டாட அமர்ந்தனர். ''உங்களைப் போன்ற பணக்கார வியாபாரிகள் சும்மா சீட்டாடினால் எப்படி? பணம் வைத்து ஆடினால்தான் உங்களுக்கு கௌரவம்'' என்று பணம் வைத்து சீட்டாட வற்புறுத்தினாள். பாக்கியாவும் அதற்கு சம்மதித்தான்.

தான் வெற்றி பெறுவோம் என்று பாக்கியா நினைக்கும் சமயம் பார்த்து, அவளுடைய பூனை திடீரென குறுக்கே பாய்ந்து விளக்கின் மீது விழ, எங்கும் இருள் சூழ்ந்தது. மீண்டும் விளக்கை ஏற்றியவுடன், சீட்டுகள் முழுதும் நிலை மாறியிருந்தன. அந்த இளம் பெண் வெற்றி பெற்று பாக்கியாவிடமிருந்து கணிசமான பணத்தைப் பெற்றாள். இதுபோல் பலமுறை நடக்க, தான் கொண்டு வந்த பணம் அனைத்தையும் இழந்த பாக்கியா மேலும் ஏராளமான பணம் அவளுக்குக் கொடுக்க வேண்டி வந்தது.

பாக்கியா திரும்பி வராததால் அவன் பெற்றோர்கள் கவலை அடைந்தனர். இதற்குள் பாக்கியா தன்னை அழைக்க வராமல் போகவே, பாகீரதி தானாகவே புருஷன்வீட்டுக்கு வந்தாள். உண்மையை அறிந்து அவளும் பதற்றம் அடைந்தாள். இதற்குள் பாக்கியாவின் வேலைக்காரன் அங்கு வந்து அனைத்தையும் கூறினான். அதைக் கேட்டு அனைவரும் அதிர்ச்சி அடைந்தனர். பாகீரதி மட்டும் சமாளித்துக் கொண்டு தான் சென்று பாக்கியாவை மீட்டு வரக் கிளம்பினாள். பாக்கியா எவ்வாறு சூதாட்டத்தில் ஏமாற்றப் பட்டான் என்பதை அந்த வேலைக்காரன் மூலம் தெரிந்து கொண்டாள். பாகீரதி தன்னுடன் ஒரு சுண்டெலியையும் ரகசியமாக எடுத்துச் சென்றாள். வேலையாளை விடுதிக்கு வெளியிலே நிறுத்தி விட்டு, தானும் ஒரு ஆண்

போல் வேடம் தரித்து பாகீரதி பாக்கியா தங்கியிருந்த விடுதிக்குள் நுழைந்தாள். பாக்கியாவிற்கு தன் மனைவியை சிறிதும் அடையாளம் தெரியவில்லை. விடுதி சொந்தக்காரியை சந்தித்து தனக்கு தங்க இடம் வேண்டும் என்று கூறி அங்கே தங்க ஏற்பாடு செய்தபிறகு, அவளிடம் தனக்கு சூதாட்டத்தில் விருப்பம் உண்டு என்பதைத் தெரிவித்தாள். அவளும் அன்றிரவு மகிழ்ச்சியுடன் சூதாட அமர்ந்து கொண்டாள்.

பாகீரதி வெற்றிபெறும் தருணத்தில், வழக்கப்படி விடுதி சொந்தக்காரி தன் பூனைக் கு சைகை செய்ய, அது விளக்கை அணைக்க ஓடி வந்தது. அதை எதிர்பார்த்திருந்த பாகீரதி தான் மறைத்து வைத்த சுண்டெலியை வெளியே விட்டாள். சுண்டெலியைத் துரத்திக் கொண்டே பூனை வெளியே ஓடி விட்டது. மீண்டும் அது திரும்பவில்லை. தொடர்ந்து சூதாட்டத்தில் பாகீரதி வெற்றிபெற, பாக்கியா இழந்த அத்தனை பணத்தையும் அதற்கு மேல் பல மடங்குகளும் அவளுக்குக் கிடைத்தது. அடுத்த நாள் காலை பாகீரதி அந்தப் பணத்தை வெளியே இருந்த வேலைக்காரனிடம் கொடுத்து அதை சொந்தக்காரிக்கு அளித்துத் தன் கணவனை மீட்டு வரச் சொன்னாள். அதன்படியே பணம் கிடைத்ததும் அந்தப் பெண்மணி பாக்கியாவை விட்டு விட்டாள். வெளியே நின்றிருந்த வண்டியில் தன் மனைவியைப் பார்த்ததும் ஆச்சரியத்தில் மூழ்கினான்.

பிறகு மூவரும் நகரத்துக் கடைகளில் தேவையான விற்பனைப் பொருட்களை வ ாங்கிக் கொண்டு தங்கள் கிராமத்திற்குத் திரும்பினர். நடந்த விஷயங்களை பாகீரதி விளக்கியதும் பாக்கியாவின் தந்தை தனது கருத்தை வெளியிட்டார். ''பாக்கியா மாறமாட்டான். அவன் ஏமாளியாகவே இருப்பான். ஆனால் அவனை கவனித்துக் கொள்ள மகா சாமர்த்தியசாலியான நம் மருமகள் அவன் கூடவே இருக்கும் வரையில், நாம் அவனைப் பற்றி ஒருபொழுதும் கவலைப்பட வேண்டிய அவசியமே இல்லை.''



# ஊழல் மன்னன்

**தெ**ன் மாவட்டத்திலிருந்த பதினெட்டு பட்டிகளுக்கும் ஜமீன்தாராயிருந்த சோமசுந்தரத்துக்கு ஒரு பிரச்சினை ஏற்பட்டது. அவரது கண்காணிப்பிலிருந்த கடியாபட்டி கிராமத்து கிராம அதிகாரி வேணுகோபால் ஏராளமாக லஞ்சம் வாங்குவதாகத் தகவல் தெரிய வந்தது. தன் திவானுடன் கலந்து ஆலோசித்த பின்னர் சண்டை சச்சரவு எதுவுமில்லாத மிக அமைதியான கிராமமான வேடப்பட்டிக்கு திவானை மாற்றி விட்டார்.

புது கிராமத்தில் லஞ்சம் வாங்கவோ, ஊழல் செய்யவோ வேணு கோபாலுக்கு வாய்ப்புகளே கிடைக்கவில்லை. நம் வாழ்க்கை இவ்வாறு வீணாகப் போகிறதே என்ற கவலையுடன் தன் வீட்டில் ஒருநாள் வேணுகோபால் அமர்ந்திருந்தபோது, தெருவில் இருவர் உரத்த சத்தமிட்டுப் பேசிக் கொண்டே சென்றனர். இதுதான் சாக்கு என்று உடனே வேணுகோபால் அவர்களை வழிமறித்து நிறுத்தி, ''இவ்வாறு தெருவில் சண்டையிடுவது மிகவும் தவறு. உங்கள் இருவரையும் தண்டிக்கப் போகிறேன்'' என்று அவர்களை பயமுறுத்தினான். அவர்கள் இருவரும், ''ஐயையோ! நாங்கள் சண்டையிடவில்லை. தமாஷாக விவாதம் செய்து கொண்டே செல்கிறோம், அவ்வளவுதான்! உண்மையில் நாங்கள் இருவரும் நண்பர்கள்!'' என்றனர்.

''நீங்கள் நண்பர்கள் என்றால் நான் நம்புவேனா? அதற்கு என்ன சாட்சி? நீங்கள் தண்டனையிலிருந்து தப்ப முடியாது'' என்று வேணுகோபால் அவர்களை அதட்ட இருவரும் விழித்தனர். உடனே வேணுகோபால் அவர்களை நெருங்கி ரகசியமாக ''கவலைப் படவேண்டாம்! நீங்கள் நண்பர்கள் என்பதற்கு நானே ஒரு சான்றிதழ் வழங்கி விடுகிறேன். ஆளுக்கு பத்து ரூபாய் வீதம் எனக்குக் கொடுங்கள்'' என்றான்.

-**காசிராமன்**



# வாசகர்களுக்கானக் கதைப் போட்டி

சிறந்த படைப்பிற்குப் பரிசு ரூ250.



கீழ்க்காணும் கதையைப் படியுங்கள்:

ஜமீன்தார் தனது மாளிகையின் இரவுக் காவலுக்கு ஒரு காவலாளியை நியமிக்க விரும்பினார். அதற்கு ஆறுமுகம், தண்டபாணி என்ற இரு வாலிபர்கள் முன் வந்தனர். அவர்களது தகுதியை சோதிக்க முதல் நாள் இரவு ஆறுமுகத்தை இரவுக் காவலுக்கு அமர்த்தினார். மறுநாள் காலை ஆறுமுகத்தை அழைத்து தோட்டவேலை செய்யச் சொன்னார். ஆறுமுகம் சுறுசுறுப்பாக தோட்டவேலை செய்ததை அவர் கவனித்தார். அன்றிரவு மற்றொரு நபரான தண்டபாணியை இரவுக் காவலுக்கு அமர்த்தினார். மறுநாள் காலை தண்டபாணியையும் தோட்ட வேலையில் ஈடுபடுத்தினார். ஆனால் தண்டபாணி சிறிது நேரம் தோட்டவேலை செய்தவன், தோட்டத்திலேயே படுத்து உறங்குவதை ஜமீன்தார் பார்த்தார். அன்று மாலையே தண்டபாணியை அழைத்து இரவு நேரக் காவலாளியாக வேலைக்கு அமர்த்தினார். வேலைக்கிடையே உறங்கிய தண்ட பாணியை எதற்கு வேலையில் அமர்த்தினீர்கள் என்று ஜமீன்தாரின் மனைவி அவரை ஆச்சரியத்துடன் கேட்டாள்.

- ஜமீன்தார் அதற்கு என்ன பதில் அளித்திருப்பார்?
- தண்டபாணியை வேலைக்கு அமர்த்தியதன் காரணம் என்ன?

உங்கள் விளக்கங்களை 100-150 வார்த்தைகளில் எழுதி ஒரு உறைக்குள் வைத்து அதன் மீது கதைப் போட்டி என எழுதி கீழ்க்காணும் கூப்பனையும் சேர்த்து அனுப்பவும்.

## முடிவு தேதி : ஏப்ரல் 30, 2005

பெயர் ------------------------------------வயது-----------பிறந்த தேதி-----------------

பள்ளியின் பெயர் ----------------------------------------------------------------------------

வகுப்பு------------------------------வீட்டு முகவரி----------------------------------------

-------------------------------------------------------------------------------------------

------------------------------------------------------------------பின்கோடு--------------------

பெற்றோர் கையொப்பம் கலந்து கொள்வோரின் கையொப்பம்

## சந்தமாமா இந்தியா லிமிடெட்

82, டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல் சென்னை-600 097.



# தகுதி வேண்டும்

**ம**கதராஜ்யம் உன்னத நிலையில் இருந்த போது போதிசத்வர் ஒருமுறை பொக்கிஷ அதிகாரியாக இருந்தார் அவரது சொந்த சொத்தே எண்பது கோடி வ ராகன்கள். க ாசியில் ஸ்ரீவத்சன் என்ற வியாபாரி இருந்தான். அவனது சொத்தும் எண்பது கோடி வராகன்களுக்கும் மேலாக இருந்தது. போதிசத்வரும் ஸ்ரீவத்சனும் நண்பர் களாக இருந்தனர்.

வியாபாரத்தில் பெரும் நட்டம் ஏற்பட்டதால் ஸ்ரீவத்சன் மிகமிக ஏழையாகி விட்டான். அப்போது அவனுக்குத் தன் நண்பரான போதி சத்வரின் நினைவு வந்தது.

உடனே அவன் போதிசத்வரைக் கண்டு ''என் நிலை மிக மோசமாகி விட்டது. நான் ஓட்டாண்டியாகி விட்டேன். இந்த நிலையில் எனக்கு உதவுபவர் உங்களைத் தவிர வேறு யாருமே இல்லை'' என்றான்.

போதிசத்வரும் ''ஸ்ரீவத்சா, கவலைப் படாதே. உனக்கு நிச்சயம் உதவி செய்கிறேன்'' எ னக் கூ றித் த ன் சொத்தில் பாதியை அதாவது நாற்பது கோடி வராகன்களை கொடுத்துத் தன் பணியாட்களில் ப ாதிப்பேரை அவனுடன் அனுப்பியும் வைத்தார்.

சில வருடங்களாயின. மகத நாட்டில் மாபெரும் கலகம் ஏற்பட்டது. அதில் போதிசத்வரின் சொத்தெல்லாம் பறிபோனதோடு அவரது உத்தி யோகமும் போய் விட்டது. அவர் ஏழையாகி வி ட்டார். அ ப்போது அவருக்குக் காசி நகரிலுள்ள தம் நண்பன் ஸ்ரீவத்சனின் நினைவு வந்தது. எனவே தன் குடும்பத்தோடு அவர் காசிக்குச் சென்றார்.

காசி நகர எல்லையில் ஓரிடத்தில் தம் மனைவி மக்களை இருக்கச் சொல்லி விட்டு போதிசத்வர் ஸ்ரீவத்சனின் மாளிகையின் வாசலில் நின்று அங்கு வாயில்காப்போனிடம் தான் இன்னாரென்றும் அவனது எஜமானனைக் காண வந்திருப்ப தாகவும் கூறினார். வாயில்

காப்போனும் ''உள்ளே போய்ப் பாருங்கள்'' என்றான்.

போதிசத்வர் உள்ளே சென்றதும் ஸ்ரீவத்சன் அவரைப் பார்த்து மரியாதை இல்லாமல் ''என்னப்பா வேண்டும் உனக்கு?'' என்று கேட்டான். அந்தத் தோரணையைக் கண்டு போதிசத்வர் தாழ்ந்த குரலில் ''உங்களைக் காணவே வந்தேன்'' என்றார்.

''சரி. இங்கே எதுவும் வசதிப் படாது. கொஞ்சம் அரிசி கொடுக்கச் சொல்கிறேன். அவ்வளவு தான் என்னால் முடியும்'' என்றான். மறு நிமிடம் ஒரு வேலையாள் கால்படி அரிசியைக் கொண்டு வந்து போதி சத்வரிடம் கொடுத்தான். அதனை வாங்கிக் கொண்டு அவர் தம் மனைவி மக்கள் இருந்த இடத்திற்குச் சென்றார். அவரது மனைவியும் ''உங்கள் நண்பர் என்ன சொன்னார்? என்ன கொடுத்தார்? '' என்று ஆவலுடன் விசாரித்தாள். போதி சத்வரும் ''இதுதான் அவனால் உதவ முடியுமாம்'' எனக் கூறிக் கால்படி அரிசியை அவளிடம் காட்டினார். ''அவனிடமிருந்து இதை ஏன் வாங்கிக் கொண்டீர்கள்? அவனது முகத்திலேயே விட்டெறிந்து விட்டு வந்திருக்க வேண்டும்'' என்றாள் அவர் மனைவி கோபத்தோடு.

போதிசத்வரும் க ண்களில் பொங்கிய நீரை அடக்கியவாறே ''என்னதான் இருந்தாலும் நண்பர்கள் ஒருவரை மற்றவர் பகைத்துக் கொள்ளக் கூடாது. அதனால் தான் எதுவும் பேசாமல் இதனை வாங்கிக் கொண்டேன்'' என்றார். அவர்கள் இப்படிப் பேசிக் கொண்டிருக் கையில் அவரிடம் முன்பு மகதத்தில் பணி புரிந்து தற்போது காசியில்



ஸ்ரீவத்சனிடம் பணிபுரியும் ஒரு வேலையாள் அவ்வழியே வந்தான். அவன் தன் பழைய எஜமானனைக் கண்டு அவரது காலில் விழுந்து வணங்கி ' 'ஐயா. த ாங்கள் இ ங்கு இந்தக் கோலத்தில் வ ரக் க ாரணம் என்னவோ?'' என்று கேட்டான்.

போதிசத்வரும் அதுவரை நடந்ததை எல்லாம் கூ றவே அப்பணியாள் மிகவும் மனம் வருந்தி போதி சத்வரையும் அவரது குடும்பத்தவ ரையும் தன் வீட்டிற்கு அழைத்துப் போனான். பிறகு தன் நண்பர்களான மற்ற பணியாட்களிடமும் போதிசத் வரைப் பற்றிக் கூறி ஸ்ரீவத்சன் அவரிடம் நன்றி கெட்ட விதமாக நடந்து கொண்டதையும் சொன்னான். அவர்களும் ம னம் கு முறி க ாசி மன்னனிடம் போய்க் கூறினார்கள்.

காசி மன்னனும் போதிசத்வரை அழைத்து எல்லாம் விசாரித்துத் தெரிந்து கொண்டு ஸ்ரீவத்சனை தர்பாருக்கு அழைத்து வரும்படிக் கட்டளை பிறப்பித்தான். வீரர்கள் அவனை அழைத்து வந்தனர். அவனிடம் காசி மன்னன் ''இவரிட மிருந்து நீ பண உதவி பெற்றது உண்மையா? எவ்வளவு பெற்றாய்?'' எனக் க டுமையான கு ரலில் கேட்டான். அரசன் கேட்ட விதத்தைக் கண்டு ஸ்ரீவத்சன் பயந்து ''ஆமாம் இவரது சொத்தில் பாதியை எனக்குக் கொடுத்து உதவினார்'' என்றான்.

காசி மன்னன் அப்போது ''ஓ! பாதி சொத்தை வாங்கிக் கொண்ட நீ இவரை இப்படித் தான் மரியாதைக் குறைவாக நடத்துவதா? '' என்றான். ஸ்ரீவத்சன் வெட்கித் தலை குனிந்து கொண்டான். மன்னன் ஸ்ரீவத்சன் சொத்து முழுவதையும் பறிமுதல் செய்து போதிசத்வருக்கு அதனைக் கொடுப்பதாகத் தீர்ப்புக் கூறினான்.

அப்போது போதிசத்வர் ''பிறர் சொத்து எனக்கு வேண்டாம். நான் கொடுத்த நாற்பது கோடி வராகன் களை மட்டும் எடுத்துக் கொள் கிறேன்'' என்றார். காசி மன்னனும் நாற்பது கோடி வராகன்களை ஸ்ரீவத் சனிடமிருந்து வாங்கிப் போதி சத்வரிடம் கொடுத்தார் போதி சத்வரும் தம் பணத்தை அடைந்து சுகமாக வாழ்ந்து வந்தார்.





# மகாவிஷ்ணு

கிருதயுகம் கழிந்து துவாபரயுகம் வந்த போது ராட்சசர்கள் ஏராளமாகத் தோன்றி அட்டூழியங்களைச் செய்து பூமிக்கு பாரமானார்கள். அப்போது பூமாதேவி விஷ்ணுவிடம் போய் முறையிட அவரும் கிருஷ்ணா வதாரம் எடுத்து அவர்களை அழிப்ப தாகக் கூறினார்.

உக்கிரசேனனின் தம்பியின் மகள் தேவகி. யதுவம்சமன்னனானவாசுதேவர் அவளைமணந்து கொண்டார். அவர் களைக் கம்சன் ரதத்தில் ஓட்டிச் சென்ற போது ஒரு அசரீர வாக்கு தேவகியின் எட்டாவது குழந்தையால் கம்சன் மடிவான் எனக் கூறியது.

கம்சன் உடனே தேவகியைக் கொல்லப் போகவே வாசுதேவர் குறுக்கிட்டு தேவகிக்குப் பிறக்கும் எல்லாக் குழந்தைகளையும் அவனிடம் அவ்வப்போது கொடுத்து விடுவதாகக் கூறினார். அதுபோல அவர் அவளுக்குப் பிறந்த ஆறு குழந்தைகளைக் கொடுக்க கம்சன் அவற்றையெல்லாம் உடனுக்கு உடனேயே கொன்று வந்தான்.

தேவகி ஏழாவது முறை கர்ப்பவதி ஆனாள். அவளது கருவில் விஷ்ணு வின் அம்சமான ஆதிசேஷன் குழந்தையாக இருந்தான். விஷ்ணு அந்த கர்ப்பத்தை தேவகியிடமிருந்து கோகுலத்திலுள்ள வாசுதேவரின் மற்றொரு மனைவியான ரோகிணிக்கு மாற்றி விட்டார். பின்னர் மாயாதேவி யிடம் அவள் கோகுலத்தில் நந்த கோபரின் மனைவியான யசோதையின் மகளாகப் பிறக்க வேண்டுமெனக்



கட்டளையிட்டார். இவ்விதமாக தேவகியின் ஏழாவது கர்ப்பம் தவறிப் போய்விட்டது. அவள் எட்டாவது தடவை கர்ப்பவதியனாதும் கம்சன் அவளையும் வாசுதேவரையும் சிறையில் அடைத்து விட்டான்.

ஆவணி மாதம் கிருஷ்ணபட்ச அஷ்டமியன்று நள்ளிரவில் சிறைக் காவலாளிகள் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தபோது தேவகி அழகிய ஆண் குழந்தைகயைப் பெற்றெடுத் தாள். அக்குழந்தை தான் மகா விஷ்ணுவின் அவதாரமான கிருஷ்ணர். அப்போது சிறைச்சாலையின் கதவுகள் தாமாகத் திறந்து கொண்டன.

விஷ்ணுவின் கட்டளைப் படி வாசுதேவர் அக்குழந்தையை எடுத்துக் கொண்டு சிறைக்கு வெளியே போய் யமுனை நதியைக் கடந்து கோகுலத்தை அடைந்தார். அப்போது தான் அங்கு யசோதைக்கு மாயதேவி பெண் குழந்தையாகப் பி றந்திருந்தாள். அங்கும் யாவரும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார்கள். வாசுதேவர் தம் குழந்தையை யசோதையின் பக்கம் வைத்து விட்டு அவ ள் பெற்ற பெண் குழந்தையை எடுத்துக் கொண்டு மதுராபுரிக்குத் திரும்பி வந்து சிறைச் சாலைக்குள் புகுந்து கொண்டார்.

அப்போது அக்குழந்தை பலமாகக் கத்தவே கம்சன் ஓடி வந்து அதனைத் தூக்கிக் கொண்டு ஓடினான். அதனைக் கொல்ல அவன் உயரத் தூக்கிய போது அது சி ரித்து ' 'கம்சா! உ ன்னைக் கொல்லப் போகிறவன் பத்திரமாக ஓரிடத்தில் இருக்கிறான்'' எனக் கூறிவிட்டு மறைந்தது.

கோகுலத்தில் யசோதைக்குக் கிருஷ்ணர் பிறந்தார் என்று எல்லாரும் மகிழ்ந்து பிறந்த தின விழா கொண்டாடினர்.

நாரதர் கம்சனிடம், ''கம்சா! உன்னைக் கொல் விஷ்ணு பிறந்து விட்டார். அதனால் ராட்சசர்களை அனுப்பி அவனைத் தேடி ஒழி'' என்று கூறி விட்டுப் போனார். கம்சன் உக்கிரசேன மன்னனைச் சிறையில் அடைத்துவிட்டு தானே மதுராபுரி மன்னனானான்.

முதலில் சிறு குழந்தைகளை ஒழித்தால் அப்போதே பிறந்த கிருஷ்ணர் அழிவார் என நினைத்து அவன் பூதனை என்ற அரக்கியை அனுப்பினான். அவள் ஊர் ஊராகப் போய் சிறு குழந்தைகளுக்குப் பால்



கொடுப்பதுபோல நடித்து அவற்றை கொன்று வந்தாள். கோகுலத்திற்கு வந்து அவள் கிருஷ்ணரைக் கொல்ல முயன்ற போது அவர் அவளைக் கொன்றார். அதன்பின் சுழல் காற்றாக திருணவர்தனன், வண்டி சக்கரமாக உருண்டு வந்த சகடாசுரன் ஆகியோரையும் கிருஷ்ணர் கொன்றார்.

கிருஷ்ணர் தம் சகாக்களுடன் வீடு வீடாகப் போய் வெண்ணெய், தயிர் பால் முதலியவற்றைத் திருடித் தின்றார். அவரது விஷமம் சகியாது ஒரு நாள் யசோதை அவரை உரலில் கட்டி வைத்தாள். அவர் அந்தக் கல்லுரலை உருட்டி இழுத்து கொண்டு பெரிய மரங்களுக்கு இடையே போனார். உரலால் அந்த மரங்கள் இருந்த இரு கந்தர்வர்கள் சாபவிமோசனம் பெற்றனர்.

கிருஷ்ணன் மண்ணைத் தின்றார் என்று கூறி யசோதை வாயைத் திறந்து காட்டும்படிக் கூறவே அவரும் வாயைத் திறந்தார். அதில் ஏழு உலகங்களையும் கண்ட யசோதை திகைத்து ஆச்சரியப்பட்டுப் போனாள். கிருஷ்ணர் யமுனையில் இருந்த காளியன் என்ற ஐந்து தலைப் பாம்பின் மீது ஏறி நடனம் புரிந்து அதனைக் கொன்றார்.

கோகுலவாசிகளெல்லாம் பிருந்தாவனத்திற்குப் போய் கோவர்த்தன மலையை வணங்கினர். இதனால் இந்திரன் கோபம் கொண்டு பெருத்த மழையைப் பெய்வித்தான். கிருஷ்ணர் கோவர்த்தன கிரியைத் தம் சுண்டு விரலால் தூக்கிக் குடை போலப் பிடிக்க கோகுலவாசிகள் எல்லாம் அதன் கீழ் நின்று மழையில் இருந்து தப்ப இந்திரனின் கர்வம் ஒழிந்தது.

கிருஷ்ணரையும் பலராமனையும் கொல்வதற்காக கம்சர், தான் தனுர்யாகம் செய்வதாகக் கூறி அவர்களை மதுராபுரிக்கு வரவழைத்தான். அவர்களைக் கொல்ல கம்சன் செய்த முயற்சிகளையெல்லாம் அவர்கள் முறியடித்தார்கள். கிருஷ்ணன் கம்சனை சிம்மாசனத்தில் இருந்து அவனது தலை மயிரைப் பிடித்து இழுத்துக் கீழே தள்ளி முஷ்டியால் குத்தியே கொன்றார்!

தேவகியும் வாசுதேவரும் உக்கிரசேனனும் சிறையிலிருந்து விடுதலை அடைந்தனர். உக்கிரசேனன் மீண்டும் மன்னனானான்.

தன் புதல்விகளாக ஆஸ்திபிராஸ்தி ஆகியவர்களை விதவைகளாக்கிய கிருஷ்ணர் மீது ஜராசந்தன் கடும் பகைமை கொண்டான். பெருத்த படையுடன் வந்து அவன் மதுரா புரியை முற்றுகையிட்டான். கிருஷ்ணர் ஜ ராசந்தனைத் தோற்ற கடித்து விரட்டியடித்தார்.

அப்போது மிலேச்ச மன்னனான காலயவனனை ஜராசந்தன் ஏவி கிருஷ்ணனைத் தாக்கச் சொன்னான். கிருஷ்ணர் காலயவனனுக்கு அகப் படாமல் முசுகுந்தர் தவம் செய்யும் குகைக்குள் புகுந்து கொண்டார்.

கிருஷ்ணர் நுழைந்த குகைக்குள் காலயவனனும் நுழைந்தான். அங்கே இருந்த முசுகுந்தரை அவன் கிருஷ்ணன் என நினைத்துத் தன் காலால் உதைத்தான். தூக்கம் கலைந்த முசுகுந்தர் கண் விழித்துத் தம் எதிரே இருந்த காலயவனனைப் பார்க்கவே அவன் எரிந்து சாம்பலானான். கிருஷ்ணரும் முசுகுந்தருக்கு தரிசனம் தந்து அவரை பத்திரிகாசிரமத்திற்குப் போய்த் தவ ம் செய்து மோட் சம் அடையுமாறு கூறினார்.

ஜெயனும் விஜயனும் தம் மூன்றாவது பிறப்பில் கிருஷ்ணனின் எதிரிகளான சிசுபாலனாகவும் தந்த வக்திரனாகவும் பி றந்தனர். சே சதி நாட்டு மன்னனின் மகனாக சிசு பாலன் பிறந்தான். அவன் பிறக்கும் போது நான்கு கைகளுடனும் மூன்று கண்களுடனும் இருந்தான். யாராவது அவனைத் தூக்கும்போது அவனது அதிகப்படியான இருகைகளும் கண்ணும் மறைந்தால் அவனால் சிசுபாலன் இறப்பான் என அசரீர



வாக்கு கூறி இருந்தது. சிசுபாலனின் தாயார் தன் மகனை தன் அ ரண் மனைக்கு வந்தவர்களிடம் எல்லாம் கொடுத்துப் பார்த்தாள். அவள் கிருஷ்ணருக்கும் பலராமனுக்கும் அத்தை. அதனால் அவர்கள் தம் அத்தை வீட்டிற்குப் போன போது கிருஷ்ணரிடம் அவள் தன் மகனைக் கொடுத்தாள். அப்போது சிசுபாலனின் அதிகப்படியான இரு கைகளும் ஒரு கண்ணும் மறைந்தன.

சிசுபாலனின்தாயார் கிருஷ்ணரிடம் தன் மகன் செ ய்யும் நூறு தவறு களைப் பொறுத்துக் கொள்ளும்படி வேண்டினாள். கிருஷ்ணரும் அவ்வாறே செய்வதாக வாக்களித்தார்.

ஜராசந்தன் அடிக்கடி மது ராபுரியின் மீ து ப டையெடுத்துப் போய் கிருஷ்ணரால் முறியடிக்கப் பட்டு விரட்டப்பட்டான். இப்படி அடிக்கடி தொல்லை வருவது கண்டு கிருஷ்ணர் சமுத்திரராஜனிடம் கேட்டு விசுவகர்மாவைக் கொண்டு துவாரகா புரியை நிர்மாணித்தார். அதில் தம் ஆட்களையெல்லாம் குடிபுகும்படி அவர் செய்தார்.

ஜராசந்தன் கடைசி முயற்சியாக சிசுபாலன், தந்தவக்கிரன், பௌண்ட்ர கன், சால்வன் ஆகியோரின் உதவியோடு மதுராபுரியைத் தாக்கினான். அதற்கு முன்பே கிருஷ்ணர் அங்கிருந்த வர்களை எல்லாம் துவாரகைக்கு அனுப்பி விட்டார். பின்னர் அவரும் பலராமனும் பிரவர்ஷணகிரி மீது போய்த் தங்கினார்கள். ஜராசந்தன்



அதனை முற்றுகை இட்டான். அம்மலைப்பகுதி முழுவதிலும் தீமூட்டினான். கிருஷ்ணரும் பலராமனும் ஆகாய வழியாய் துவார கையை அடைந்தார்கள்.

கிருஷ்ணரும் பலராமரும் எரிந்து போய் விட்டார்கள் என ஜராசந்தன் எண்ணி மகிழ்ந்தபோது அவரும் பலராமனும் பத்திரமாக துவார கையில் இருக்கிறார்கள் எனக் கேட்டு திகைத்துப் போன்ன. சிசுபாலன் ஆத்திரம் கொண்டு மதுராபுரியை எரித்துச்சாம்பலாக்கினான். ஜராசந்தன் கப்பல்களில் வீரர்களைஏற்றித் துவாரகா புரியைத் தாக்க அனுப்பினான். அவை கடலில் மூழ்கிப் போயின. ஜராசந்தன் எதிர் முனையிலிருந்து எதுவும் செய்ய முடியாது பொறுமினான்.

லட்சுமிதேவி விதர்ப்ப மன்ன னான பீஷ்மகனின் மகள் ருக்மிணி

யாகப் பிறந்தாள். இளம் வயதில் இருந்தே அவள் கிருஷ்ணரையே தன் கணவராக மனதில் நினைத்து விட்டாள். அவளை அவளது அண்ணன் ருக்மி சிசுபாலனுக்குக் கல்யாணம் செய்து கொடுக்க விரும்பினான். அதற்கான ஏற்பாடுகளையும் அவன் செய்யலானான்.

ருக்மிணி தன்னைக் காப்பாற்றி மணந்து கொள்ளுமாறு கிருஷ்ணருக்குச் செய்தி அனுப்பினாள். விவாகத்திற்கு முன் துர்கா பூஜை செய்துவிட்டு வருவதாக ருக்மிணி கூறி கோயிலுக்குப் போக கிருஷ்ணர் அவளைத் தன் தேரில் அமர்த்திக் கொண்டு துவாரகை நோக்கிச் சென்றார். ருக்மிணி சிசுபாலன் ஜராசந்தன் ஆகியோர் அவளைத் தடுக்க முயன்றார்கள். பலராமர்யாதவ வீரர்களோடு வந்து கிருஷ்ணருக்கு உதவி புரிந்தார்.

கிருஷ்ணர் வேகமாக சிசுபாலனை விரட்டினார். பலராமன் ஜராசந்தனை அடித்துத் துரத்தினான். ருக்மியும் என்ன செய்வதெனத் தெரியாது திகைத்து தோற்றான். அவனை கிருஷ்ணர் பிடித்து தலையை மொட்டையடித்து மீசையையும் எடுக்கச் செய்து அவமானப் படுத்தினார்.

துவாரகையில் கிருஷ்ணருக்கும் ருக்மிணிக்கும் முறைப்படி விவாகம் சிறப்பாக நடைபெற்றது. இதற்குப் பின் கிருஷ்ணர் ஜாம்பவானின் புதல்வி ஜாம்பவதியை மணந்தார். சத்திரஜித் என்பவன் தன்னிடமிருந்த சியமந்தக மணியை கிருஷ்ணர் தான் திருடிக் கொண்டு போய் விட்டார் என்றான்.

கிருஷ்ணர் சியமந்தக மணியை தேடிக் கொண்டு வந்து சத்திரஜித்திடம் கொடுத்து அவனது மகளான சத்தியபாமாவை மணந்து கொண்டார். பின்னர் மித்திர விந்தை, காசிந்தி, லஷ்ணா, பத்திரா, முதலிய பெண்களையும் அவர் விவாகம் செய்து கொண்டு அஷ்ட மகிமை, சித்திகளை அடைந்து மகாபுருஷராக விளங்கி துவாரகையில் இருந்து ஆட்சி புரிந்தார்.



# ஆயிரம் பேரைக் கொன்றவன்...

**வே**ணுகோபால் வயது முதிர்ந்த அனுபவசாலியான வைத்தியர். அவரது புகழ் அந்தக் கிராமத்தில் மட்டுமின்றி, பக்கத்து கிராமங்களில் கூடப் பரவியிருந்தது. ஒருநாள் அவரைத்தேடி இருபது வயது நிறைந்த வாலிபன் ஒருவன் வந்து, ''ஐயா என் பெயர் விஸ்வநாதன். சென்ற பத்து வருடங்களாகப் பல மருத்துவர்களிடம் உதவியாளனாக இருந்திருக்கிறேன். தவிர மருத்துவ சம்பந்தப்பட்ட அனைத்துப் புத்தகங்களையும் நன்றாகப் படித்திருக்கிறேன். இப்போது உங்கள் உதவியாளானாகச் சேரலாம் என்ற எண்ணத்துடன் வந்திருக்கிறேன். உங்களிடம் பயிற்சி பெற்றால், சில ஆண்டுகளில் நானே ஒரு வைத்தியராக மாறி விடுவேன். நீங்கள்தான் எனக்கு உதவ வேண்டும்'' என்று பணிவுடன் கேட்டான்.

''அப்படியானால் நீ இப்போது அரை வைத்தியன் என்று சொல்'' என்றார் வேணுகோபால். ''ஆமாம்'' என்று அவன் தலை அசைத்தான்.

''நீ என்னுடைய உதவியாளனாக தாராளமாக இன்றே சேரலாம். இப்போது எனக்குக் கிடைத்த தகவல்படி, எனக்குத் தெரிந்த சுரேஷ் என்பவர் கையில் கத்தி குத்தியதால் காயம் ஏற்பட்டுள்ளது. உடனே அவர் வீட்டுக்குப் போய் சிகிச்சை அளிக்க வேண்டும். உன்னை அனுப்பினால் நீ சென்று சிகிச்சை அளிப்பாயா? '' என்று கேட்டார். அந்த வாலிபன் திடுக்கிட்டு, ''ஐயா, மருத்துவ புத்தகங்களை என் நண்பன் வீட்டிலே வைத்து விட்டேன். கொஞ்சம் அவகாசம் கொடுத்தால் ஓடிச்சென்று புத்தகங்களைப் படித்து விட்டு வந்து சிகிச்சை செய்யக் கிளம்புகிறேன்'' என்றான்.

''தம்பி! நீ புத்தகம் படித்து விட்டு வந்துதான் சிகிச்சை அளிக்க வேண்டும் என்றால், அதற்குள் அந்த சுரேசின் ரத்தம் முழுவதும் வெளியேறி இறந்தே போய் விடுவான். சும்மாவா சொன்னார்கள் ஆயிரம் பேரைக் கொன்றவன் அரை வைத்தியன் என்று! நீ வைத்தியராகும் ஆசையை விட்டு விடு'' என்றார் வேணுகோபால்.

**-காயத்ரி சங்கரன்.**





# கடவுளைவிட மனிதனே வல்லவன்

இரத்தினபுரியை ஆண்டு வந்த மணிகண்ட ராஜா தன் சாம்ராஜ்யத்தை தனியொருவராக நிர்வாகம் செய்வது கடினமாக இருந்ததால், தனது மந்திரிகளைக் கூட்டி ஆலோசனை செய்தார். அவர்களுடைய அறிவுரையின்படி தனது ராஜ்ஜியத்தை வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு என்று திசைக்கொன்றாகப் பிரித்து, ஒவ்வொரு பகுதியிலும் சிறந்த நிர்வாகத் திறமை படைத்த ஒருவரைத் தேர்வு செய்து தன் பிரதிநிதியாக நியமித்தார். ஒவ்வொருவரும் அந்தந்தப் பகுதியைச் சேர்ந்தவராக இருந்தனர். ஒவ்வொருவரும் தனது பகுதியின் முன்னேற்றத்திற்காகப் பாடுபடுவதும் திட்டங்கள் வகுப்பதும் மக்களின் குறைகளைக் களைந்து ஆவன செய்வதுமாக தங்கள் பணிகளை சிறப்பாக செய்து வந்தனர்.

இவ்வாறு சில ஆண்டுகளாக சாம்ராஜ்ஜியத்தின் நிர்வாகம் சீராக நடைபெற்றது வந்தது. ஆனால் விரைவிலேயே சில குறைபாடுகள் தோன்றலாயின. ஒவ்வொரு பிரதிநிதியும் தான் பிறந்து வளர்ந்த பகுதியை மற்ற பகுதிகளைக் காட்டிலும் மேன்மையாக விளங்கச் செய்ய வேண்டும் என்று கருதி செயற்படத் தொடங்கினர். உதாரணமாக வடக்குப் பகுதியில் கரிசல் மண்பூமி இருந்ததால், பருத்தி நன்றாக விளைந்தது. ஆனால் திறமையான நெசவாளர்கள் தெற்குப் பகுதியில் இருந்தனர். பிரிவினைக்கு முன்பு பருத்தி தங்குதடையின்றி தெற்குப் பகுதிக்கு அனுப்பப்பட்டது. ஆனால் பிரிவினைக்குப் பிறகு வடக்குப் பகுதி பிரதிநிதி பருத்தி ஏன் இன்னொரு பகுதிக்கு அனுப்பப்பட வேண்டும் என்றும் தன் பகுதி மக்கள் வளமாக வாழ தங்களிடம் விளையும் பருத்தி தங்கள் பகுதியிலேயே பயன் பட வேண்டும் என்று கருதி பருத்தி

-25 ஆண்டுகளுக்கு முன் அம்புலிமாமாவில் வெளியான கதை-



அனுப்புவதை தடை செய்தார். அதனால் தெற்குப் பகுதி நெசவாளர்கள் தங்கள் பகுதியில் நெல், கரும்பு விளைந்து கொண்டிருந்த பூமியில் பருத்தி பயிர் செய்தனர். அங்கு பருத்தி நன்றாக வளரவில்லை. அதே சமயம் வடக்குப் பகுதியில் திறமையான நெசவாளர்கள் இல்லாததால் நெய்யப்பட்ட துணிகளின் தரம் குறைந்தது.

இவ்வாறு ஒவ்வொரு பகுதியிலும் கச்சாப் பொருட்களின் உற்பத்தி கணிசமாக இருந்தும் அவை முழுவதுமாகப் பயன்படுத்தப் படாமல் ராஜ்ஜியத்தின் பொருளாதாரம் பாதிக்கப்பட்டது. இதை ஆராய்ந்து அறிவதற்காக ராஜா ஆலோசனைக் குழுக்களை ஏற்பாடு செய்தார். ஆனால் அவற்றின் அறிக்கைகளையும் பரிந்துரைகளையும் கேட்ட பிறகும் ராஜாவுக்கு திருப்தி ஏற்படவில்லை. சலித்துப் போன ராஜா இறுதியில் பொருளாதார நிபுணர்களின் குழு ஒன்றைக் கூட்டி அவர்களுடைய விவாதங்களைக் கேட்டார். அவர்களுள் சசிதான் என்ற அறிஞர் பேசிய பேச்சு ராஜாவைக் கவர்ந்தது.

அவரை மட்டும் தனியே அழைத்து ராஜா அவரிடம், ''அறிஞரே! நீங்கள் சகலகலா வல்லுநர் என்று தோன்றுவதால் உங்களிடம் பொதுவான வேதாந்த விஷயங்களைப் பற்றி விவாதிக்க விரும்புகிறேன்.'' எனக் கூறிய ராஜா தொடர்ந்து ''இந்த உலகைப் படைத்த இறைவனை சர்வ வல்லமை உள்ளவராகக் கருதுகிறேன். உலகில் எதுவுமே இறைவன் விதித்தபடியே நடக்குமென்று நம்புகிறேன். அதைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்னவோ?'' என்று கேட்டார். ''மகாராஜா, இறைவனின் சக்தியை விட மனித சக்தி பெரியது. கடவுளைவிட மனிதனே வல்லவன். இறைவன் விதித்ததை மாற்ற மனிதனால் முடியும்'' என்றார் சசிதரன். ''என்ன இப்படிச் சொல்கிறீர்கள்? உங்களை இறைபக்தியுள்ள அறிஞர் என நினைத்தேன். நீங்களே இப்படிச் சொல்லலாமா?'' என்று படபடப்புடன் மணிகண்டராஜா கேட்டார்.

''மகாராஜா என்னுடைய சொந்த அனுபவத்தின் பேரில்தான் நான் இவ்வாறு கூறுகிறேன். நான் கல்வி பயிற்றுவதில் வல்லவன். நான் உங்கள் ராஜ்ஜியத்தின் வடக்குப்

பகுதியில் உள்ள புகழ்பெற்ற பல்கலைக் கழகத்தில் பேராசிரியாகப் பணி புரிந்து வந்தவன். பேராசிரியாகப் பணி புரிவதற்காகவே இறைவன் என்னை விதித்திருக்கிறார் என்று நான் பெருமைப்பட்ட காலம் உண்டு. ஆனால் திடீரென ஒருநாள் உங்கள் வடக்குப் பகுதியின் பிரதிநிதி ''நீ கிழக்குப் பகுதியைச் சேர்ந்தவன். உன்னுடைய சொந்த இடத்திற்குப் போய்விடு'' என்று சொல்லி என்னை வேலையிலிருந்து நீக்கி விட்டார். நான் இப்போது கிழக்குப் பகுதிக்குத் திருப்பிச் சென்று அங்கே விவசாயம் செய்து கொண்டு இருக்கிறேன். இப்போது நீங்களே சொல்லுங்கள்! இறைவன் விதித்ததையே மாற்ற மனிதனால் முடியும் அல்லவா? '' என்று கேட்டார்.

அப்போதுதான் மணிகண்ட ராஜாவுக்கு தம் ராஜ்ஜியத்தின் முன்னேற்றப் பாதையின் சரிவுக்கு காரணம் புலப்பட்டது. தனது பகுதி மேம்பட வேண்டும் என்பதற்காக ஒவ்வொரு பிரதிநிதியும் ஈடுபட்ட சுயநலச் செயற்பாடுகளால்தான், ஒட்டுமொத்த ராஜ்ஜியமும் பாதிக்கப்படுகிறது என்று புரிந்தது.

உடனே ராஜா தன் மந்திரி மண்டலத்தை அழைத்துத் தங்கள் ராஜ்ஜியத்தின் முன்னேற்றத்திற்கு முட்டுக் கட்டையாக இருந்த காரணத்தை விளக்கிக் கூறி அதற்கு ஒரு தீர்வு காணச் சொன்னார். நீண்ட நேர ஆலோசனைக்குப் பிறகு அனைவரும் ஒரு முடிவுக்கு வந்தனர். அதாவது ஒரு பகுதியை நிர்வகிப்பவர் அந்தப் பகுதியைச் சேராதவராக இல்லாமல் வேறு பகுதியைச் சேர்ந்தவராக இருக்க வேண்டும் ஆகவே இப்போதுள்ள பிரதிநிதிகள் அனைவரையும் இடமாற்றம் செய்ய வேண்டும்.

அவ்வாறு எடுத்த முடிவின்படி பிரதிநிதிகள் இடமாற்றம் செய்யப் பட்டனர். அதிலிருந்து அதுவரை நிலவி வந்த போட்டியும் சுயநலமும் மாறி ஒவ்வொரு பிரதிநிதியும் ஒழுங்காக செயற்படத் தொடங்கினர். மணிகண்ட ராஜாவின் சாம்ராஜ்ஜியம் முன்னேற்றப் பாதையில் செல்லத் தொடங்கியது.



ஜெயநகரத்தில் ஒரு பழைய கோயிலின் அருகே புதையுண்டு இருந்த கனகதுர்கா தேவியின் தங்க விக்கிரகம் ஒன்றை வெளியே எடுத்து, சுகதேவன் அதை ஒரு புதிய கோயிலில் பிரதிஷ்டை செய்ய முயற்சிக்கும் விஷயம் வீரசிம்மனின் செவிகளுக்கு எட்டுகிறது. வீரசிம்மன் கனகதுர்கா தேவியின் விக்கிரகத்தைக் கைப்பற்றுவதற்காக ஜபர்சிங் தலைமையில் ஒரு படையை அனுப்புகிறான். ஜபர் சிங்கின் வீரர்கள் அதைக் கைப்பற்றி எடுத்து வருகையில் புயலில் விக்கிரகம் காணாமல் போகிறது.

# சூர்யா

21

**வீர இளவரசனின் துணிகரச் செயல்கள்**





ஓவியம் : காந்தி அய்யா












கோயிலை நோக்கி பக்தர்கள் ஊர்வலமாகச் செல்கின்றனர். சுகதேவனின் பின்னால் ஜெயானந்த முனிவரும், அவருடைய மூன்று சீடர்களும் வருகின்றனர். அவர்களின் பின்னால் தலைவனின் காவலர்களோடு இரண்டு பல்லக்குகள் வருகின்றன. கோயிலின் முன் வந்ததும் ஊர்வலம் நிற்கிறது.


















சுகதேவா! ரத்தம் சிந்த விருப்பமில்லை என்று என் சேனாதிபதியிடம் சொன்னாய். நானே இன்று தேவியை எடுத்துச் செல்ல வந்துள்ளேன். என்னிடம் உள்ள படை பலத்தைப் பார்! நான் தயாராக வந்துள்ளேன்.
வீரசிம்மா! உன்னோடு போர் புரிய என் ஆட்கள் இல்லை. அதை நான் விரும்பவில்லை. எங்களை அமைதியாக இருக்க விடு.


கனக துர்காவிற்கென்று ஒரு கோயில் இருக்க வேண்டும் என்பது மக்களின் விருப்பம்.
நான் இதை பிரதிஷ்டை செய்ய விடமாட்டேன். மரியாதையாக விக்கிரகத்தைத் தந்துவிடு.


யார் இவள்?
இவள் என் மகள் சுகன்யா. அவள்தான் பூஜை செய்யப் போகிறாள்.
முடியாது. நாங்கள் தரமாட்டோம்.


வீரசிம்மன் குதிரையிலிருந்து இறங்குகிறான். தன் எண்ணத்தை திடீரென மாற்றிக் கொள்கிறான்.
சுகதேவா! ஒன்று செய்! விக்கிரகத்தை நீயே வைத்துக் கொள். ஆனால் சுகன்யாவை எனக்குக் கொடுத்து விடு.
உளறாதே, வீரசிம்மா!


வீரசிம்மன் முகத்திலிருந்த சிரிப்பு கோபமாக மாறுகிறது.
உன் மகள் சாந்திபுரத்தின் ராணியாகப் போகும் வாய்ப்பை, நீ நழுவ விடுகிறாய்.
உன்னுடைய அயோக்கியத் தனத்திற்கு ஓர் எல்லை வேண்டும்.


ஒரு ராஜா தான் திருமணம் புரியப் பெண் கேட்பதில் அயோக்கியத்தனம் எதுவுமில்லை. நீ மறுத்தால், உன் நாட்டையும் விக்கிரகத்தையும் இழப்பாய்!
கௌரவத்தைக் காப்பாற்ற அனைத்தும் இழந்து விட்டாலும் எனக்குக் கவலையில்லை.


வாக்குவாதம் முற்றுவதைக் கண்டு சீடர்களில் ஒருவன் சுகன்யாவின் அருகில் சென்று அவள் காதில் ரகசியமாக ஏதோ சொல்கிறான்.
உன் தந்தையிடம் சொல்.
சரி ஆகட்டும்.


வீரசிம்மனின் பயமுறுத்தல் தொடர்கிறது.
அப்படியா சொல்கிறாய்! உனது நாடு விக்கிரகம் பெண் யாவற்றையும் இழப்பாய், பார்!


சுகன்யா தன் தந்தையிடம் செல்கிறாள். சுகதேவன் பின்னால் திரும்புகிறான்.
தந்தையே! அவர் சொல்வதை ஒப்புக் கொண்டு, தேவியைக் காப்பாற்றுங்கள்!
நீ யோசித்துத் தான் சொல்கிறாயா சுகன்யா?


சுகதேவன் அதிர்ச்சி அடைகிறான். தன் மகள் இவ்வாறு தன்னை ஒப்புக் கொள்ளச் சொல்வதன் காரணம் என்ன?
நிதானமாக யோசித்துச் சொல் சுகன்யா!
தந்தையே, நாட்டின் நலனுக்காக என்னை பலி கொடுத்து விடுங்கள்


ஜெயானந்த முனிவரும் ஒரு சீடனும் தன்னை நோக்கி வருவதை சுகதேவன் கவனிக்கிறான்.
அவர்கள் ஏன் என்னை நோக்கி வருகின்றனர்? அவர்கள் மனதில் ஏதாவது ரசகியத் திட்டம் இருக்கிறதா?
தொடரும்.

# நாலந்தா பல்கலைக்கழகம்

**பா**ரதத்தை மிகச் சிறப்பாக ஆண்ட குப்த மன்னர்களின் ஆட்சிக்காலத்தை பொற்காலம் என்று கூறப்படுகிறது. அவர்களுடைய ஆட்சியில் சிற்பம், சித்திரம், இசை ஆகிய பல கலைகளும் மிகச் சிறப்பாகத் தழைத்தோங்கின. காளிதாசன் போன்ற அமரப்புகழ் பெற்ற கவிஞர்கள் குப்தர்களின் காலத்திலே தோன்றியவர்கள். அவர்களின் ஆட்சியில் கல்விக்கு சிறந்த இடம் அளிக்கப்பட்டது.



கி.மு.413ஆம் ஆண்டு, விக்கிரமாதித்திய மன்னரின் புதல்வனான பிரதம குமார குப்தர் சக்கரவர்த்தி ஆனார். நாலந்தா எனுமிடத்தில் மிகப் பெரிய பல்கலைக்கழகத்தைத் தோற்றுவித்த பெருமை அவரையே சாரும். புத்த மதத்தினரின் ஆதிக்கத்தில் பல்கலைக்கழகம் இயங்கி வந்தபோதும் புத்தமத நூல்களுடன், இந்துமத சாஸ்திரங்களும், வேதம், உபநிஷத்துகளும் கற்பிக்கப்பட்டன. சுமார் 700 ஆண்டுகள் வரை நாலந்தா பல்கலைக்கழகம் இயங்கி வந்ததாகக் கூறப்படுகிறது. அதனுடைய புகழ் பாரதம் மட்டுமின்றி உலகெங்கும் பரவியிருந்ததால், தென் ஆசியா, சீனா போன்ற நாடுகளிலிருந்து மாணவர்கள் அங்கே பயில வந்தனர். சீன யாத்திரிகரான ஹுவான் சுவாங் ஏழாம் நூற்றாண்டில் அங்கு சில காலம் தங்கி கற்றதோடன்றி அதைப் பற்றின பல தகவல்களை தன் பயணக் குறிப்பில் எழுதியுள்ளார். ஒரே சமயத்தில் பல ஆயிரக்கணக்கான மாணவர்கள் தங்கி பயில்வதற்கேற்ப, ஏராளமான அறைகளும் மண்டபங்களும் அந்தப் பல்கலைக்கழகத்தில் இருந்தனவாம். பாட்னாவிலிருந்து சுமார் 60 மைல் தூரத்தில் அமைந்திருந்த நாலந்தா பல்கலைக்கழகம் குப்தர்களின் ஆட்சியின் சிறப்பான அம்சங்களில் தலையாயதாகும்.

## உங்கள் விஞ்ஞானம்

### நமது உடல்

நமது உடலிலுள்ள உறுப்புகளில் அதிகப் பரப்பளவுள்ளது எது தெரியுமா? சொன்னால் நம்புவது கடினம். அது நமது தோல்! நமது உடல் முழுதும் மூடியுள்ள தோலின் பரப்பளவு மிகவும் அதிகம் என்பது இப்போது உங்களுக்கே புரியும். உடலின் எடையில் பதினாறு சதவீதம் நமது தோல் மட்டும் உள்ளது. தோல் நமக்குப் பயக்கும் நன்மைகள் பல உண்டு. உடலிலுள்ள தேவைக்கு அதிகமான தண்ணீரையும் உப்பையும் வெளியேற்றி உடலின் வெப்பநிலையை சீராக வைத்துக் கொள்கிறது. தோலில் உள்ள மெலானின் நமது நிறத்தை நிர்ணயிக்கிறது. சூரியனுடைய புற ஊதாக்கதிர்களினால் ந மது உ டலுக்கு உண்டாக இருக்கும் தீங்கினைத் தடுக்கிறது. உடலில் காயம் பட்டால், பாதிக்கப்பட்ட பகுதியிலுள்ள சிதைந்த தோல் தானாகவே வளர்ந்து காயத்தை மூடுகிறது.



## உங்கள் சுற்றுப்புறம்

### கங்காரு எலிகள்



கங்காரு எலி எனப்படும் உயிரினம் உண்மையில் கங்காருவுமில்லை, எலியும் இல்லை. பாலைவனத்தில் வசிக்கும் கங்காரு எலி, கங்காருவைப் போல் துள்ளி துள்ளி ஓடுகிறது. அதே சமயம் தோற்றத்தில் எலியைப் போலவும் இருக்கிறது. இதனுடைய பின்னங் கால்கள் மிகப் பெரிதாகவும் நீளமாகவும் இருக்கும். ரோமங்கள் அடர்ந்த மிக நீளமான வாலும் இதற்கு உண்டு.

30 சென்டிமீட்டருக்கும் குறைவான உயரமுள்ள கங்காரு எலி தன் இரு பின்னங்கால்களைப் பயன்படுத்தி கங்காருவைப் போல் தாவி தாவிச் செல்கிறது. தான் உட்கொண்ட நீரை பல நாட்கள் சேமித்து வைக்கும் வகையில் இதற்கு சிறு நீரகங்கள் அமைந்துள்ளன. தன் உணவை உடனே உண்ணாமல், தன் குழியான கன்னங்களுக்குள் அடக்கி வைத்துக் கொண்டு, த ன் வளையில் அமர்ந்து கொண்டு சாவகாசமாக உண்கிறது.

## உங்களுக்குத் தெரியுமா?

### ரோஸ் நினைவு நாள்

பிப்ரவரி மாதம் 14ம் தேதி 1994ஆம் ஆண்டு, மெலிண்டா ரோஸ் ஹாதவே என்ற ப திமூன்று வ யதுச் சிறுமிக்கு ‘அட்கின்ஸ் டியூமர்’ எனப்படும் பயங்கர புற்றுநோய் இருப்பதாகக் கண்டு பிடிக்கப்பட்டது. ஆனால் தன்னுடைய நோயைக் குறித்து மனம் தளராமல் உற்சாகமாக இருக்கப் பழகிக் கொண்டது மட்டுமின்றி, தன்னைப்போல் இளவயதிலேயே புற்று நோயால் பாதிக்கப்பட்ட மற்ற சிறுவர்கள், சிறுமிகள் இடையே தன்னம்பிக்கையையும் தைரியத் தையும் பரப்ப முயற்சி எடுத்துக் கொண்டாள். இறுதியில் 1996ஆம் ஆண்டு செப்டம்பர் 15ம் தேதி ரோஸ் மண்ணுலக வாழ்வை நீத்தாள். உலகிலுள்ள பு ற்றுநோய் ம ருத்துவ மனைகள் அனைத்தும் அவள் இறந்த தினத்தை ரோஸ் நினைவு நாளாகக் கொண்டாடுகிறார்கள்.



## நம் இந்தியா

### இயற்கைப் புதிர்



1. பிஷ்னோயி இயக்கம் என்றால் என்ன?
அ)மரங்களை வழி படுவது ஆ)விஷ்ணுவின் வழிபாடு இ)கடல் வழிபாடு ஈ)வைணவத் தலங்களுக்குப் புனிதப் பயணம்.

2. ‘ராக் கார்டன்’ என்பது எங்குள்ளது?
அ)சண்டிகர்
ஆ)லுதியானா
இ)சோன்பட்
ஈ)பானிபட்



3. எந்த ஆண்டு இந்திய வனத்துறை சட்டம் அமலாக்கப்பட்டது?
அ)1927 ஆ)1967
இ)1907 ஈ)1957

4. சிப்கோ இயக்கம் எந்த ஆண்டு தொடங்கியது?
அ)ஏப்ரல் 1983
ஆ)ஏப்ரல் 1973
இ)ஏப்ரல் 1953
ஈ) ஏப்ரல் 1993

(விடைகள் 70ம் பக்கம்)

# போட்டோ வாக்கியப் போட்டி


SPHOORTHY REDDY V.H.

இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.


MAHANTESH C. MORABAD

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவு ஜூன் 2005 இதழில் வெளியிடப்படும்.
போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

வாழ்த்துகள்!

பரிசு பெற்றவை

பிப்ரவரி 2005 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :

ஏ. சுப்புலட்சுமி
சிவப்பிரகாசர் பள்ளி,
எண் 37, வடக்குத் தெரு,
தச்ச நல்லூர் – 627 358.




"பொட்டு வைத்தால் பொண்ணு ரெடி;
பொண்ணு வந்தால் மேளம் ரெடி"

## நம் இந்தியா – விடைகள் (பக்கம் 69)

1. மரங்களின் வழிபாடு.
2. சண்டிகர்.
3. 1927.
4. ஏப்ரல் 1973.

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 26 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : B. Viswanatha Reddi (Viswam)

# OPENING A NEW HORIZON IN THE WORLD OF LITERATURE FOR THE YOUNG

**CAREFULLY CHOSEN LEGENDS AND PARABLES, INCLUDING TALES FROM BUDDHA JATAKA**




## NOW IN BOOK FORM

RS 200 FOR A SET OF FOUR BOOKS










From the pen of Saraswati Samman and Sahitya Akademi Award winner

## MANOJ DAS

*Jointly published by*

CHANDAMAMA  *and*  Popular Prakashan

## SPECIAL DISCOUNT OFFER TO SUBSCRIBERS OF CHANDAMAMA

**USE COUPON BELOW**

I am a subscriber of Chandamama - Subscriber No ..........................................................................................

Please send me a set of Legends and Parables. I am herewith sending Rs 150/- by D/D on...........................

..................................Bank/M.O. Receipt No ............................ issued by ........................................... P.O.

in favour of Chandamama India Ltd., 82 Defence Officers Colony, Ekkatuthangal, Chennai-600 097.

Name .................................................................... Address ...................................................................

.................................................................................................................................... Pin ........................

Date ......................                                                                                                                    Signature

**WORTH ACQUIRING FOR YOUR PERSONAL LIBRARY**

AMBULIMAMA (Tamil) April 2005 Regd. No. TN/PMG(CCR)-592/03-05
Regd. with Registrar of Newspaper for India No.1095/57
Licensed to post without prepayment No.377/03-05 Foreign - WPP.No.378/03-05

**PCRA Page** Website : www.pcra.org

# சாலை பாதுகாப்பு விதிகள்



**சா**லை பாதுகாப்புப் பற்றிய ஒரு வார கால கொண்டாட்டத்தின் சிறப்பு நிகழ்ச்சிகளில் ஒன்றான சாலை பாதுகாப்பு விதிகளைப் பற்றிய கட்டுரைப் போட்டியில் வீணாவின் வகுப்பினர் பங்கேற்கின்றனர். சிறப்பான கட்டுரைக்குப் பரிசளிக்கும் விழா அன்று நடுவர்களாக நியமிக்கப் பட்டிருந்தவர்களில் ஒருவரான நகரக் காவல்துறை அதிகாரி உரையாற்றுகையில் ''கட்டுரைப் போட்டியில் பங்கேற்ற அனைவருமே மிகச் சிறப்பாக கட்டுரை இயற்றியுள்ளீர்கள் பொதுவாக அனைவருமே வாகன ஓட்டுனர்களும் பாதசாரிகளும் சாலையில் பாதுகாப்பாக எவ்வாறு இயங்க வேண்டும் என்பதைப் பற்றியே எழுதியிருக்கிறீர்கள். உங்களில் ஒருவர் மட்டும் பாதசாரிகள் சாலையின் குறுக்கே, கடந்து செல்ல உதவும் போக்குவரத்துச் சின்னத்தை சீராகப் பயன்படுத்துவது பற்றி எழுதியுள்ளார்,'' என்றவர் தொடர்ந்து ''பிரதான சாலைகளில் பாதசாரிகள் குறுக்கே கடந்து செல்ல உதவியாக சில இடங்களில் தரையில் வெண்மை, கறுப்புநிறக் கோடுகள் மாறிமாறி வரிக்குதிரைக்குள்ளது போல் திகழ்வதைக் காணலாம். ஆங்கிலத்தில் 'Zebra Crossing' என்று குறிப்பிடப்படும் இந்த போக்குவரத்து சின்னம் உள்ள இடங்கள்தான் சாலையை பாதசாரிகள் கடக்க பத்திரமானது. சாலையைக் கடப்பதற்கு முன், சாலையோரத்தில் நின்று முதலில் வலது பக்கமும் பிறகு இடது பக்கமும் ஏதாவது வாகனங்கள் வருகிறதா என்று கவனித்த பிறகே கடக்க வேண்டும். அவ்வாறு செய்யத் தவறினால் பாதசாரி தன்னை விபத்துக்கு ஆளாக்குவதுடன் எதிரில் வரும் வாகனங்களுக்கும் விபத்து உண்டாக வழி வகுக்கிறார். ஆகையால் எச்சரிக்கை என்பது வாகன ஓட்டுனர்களுக்கு மட்டுமின்றி பாதசாரிகளுக்கும் தேவை என்பதை அழகாக விளக்கியுள்ள வீணா என்ற மாணவியின் கட்டுரை முதல் பரிசு பெறுகிறது'' என அறிவிக்கிறார். மாணவ, மாணவிகளின் கரகோஷம் வானைப் பிளக்கிறது.

